## முன்னுரை

அப்போஸ்தலர் பவுல் தீமோத்தேயுவுக்கு நிருபம் எழுதியது போலவே, தீத்துவுக்கும் நிருபம் எழுதுகிறார். இவ்விரண்டு நிருபங்களும் உபதேசத்தில் ஒத்திருக்கிறது. தீத்துவுக்கு எழுதின நிருபத்தில் தீத்துவைப்பற்றி அதிகமாக அறிந்துகொள்ள முடிகிறது. தீத்து கிரேக்கனாயிருந்தவன் (கலா 2:3). பவுல் தீத்துவை உத்தம குமாரன் (தீத்து 1:1) என்றும், தன் சகோதரன் (2கொரி 2:13) என்றும், தனக்கு கூட்டாளியும், தன்னுடைய உடன் வேலையாளுமாயிருக்கிறான் (2கொரி 8:23) என்றும் குறிப்பிடுகிறார்.

தீத்து அப்போஸ்தலர்களோடு எருசலேமிலிருந்த சபைக்குப் போனார் (கலா 2:1). கொரிந்து சபையிலே தீத்து கர்த்தருடைய வார்த்தையைக் கருத்தாய்ப் பிரசங்கம் பண்ணினார். கொரிந்தியருக்காக தீத்து மிகுந்த ஜாக்கிரதையுள்ளவராகயிருந்தார் (2கொரி 8:16).

அப்போஸ்தலர் பவுல் கொரிந்தியருக்கு எழுதின இரண்டாவது நிருபத்தை, அவர் தீத்துவின் கையில் கொடுத்தனுப்பினார் (2கொரி 8:16-18,23; 9:2-4; 12:18). அப்போஸ்தலர் பவுலோடு தீத்து ரோமாபுரியிலிருந்தார். அதன்பின்பு அவர் தல்மாத்தியா நாட்டிற்குப்போனார் (2தீமோ 4:10). இதன்பின்பு தீத்துவைப் பற்றி வேதாகமத்தில் எந்தக் குறிப்பும் காணப்படவில்லை.

கிரேத்தா தீவிலே சுவிசேஷம் வல்லமையாய்ப் பிரசங்கிக்கப்பட்டது. ஜனங்கள் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைத் தங்கள் இரட்சகராக இருதயங்களிலே ஏற்றுக் கொண்டார்கள். ஒரு சமயம் பவுலும் தீத்துவும் கிரேத்தா தீவுக்கு பிரயாணம் செய்திருக்கிறார்கள். ஆனால் அப்போஸ்தலர் பவுலால் கிரேத்தா தீவிலே அநேக நாட்கள் தங்கியிருந்து ஊழியம் செய்ய முடியவில்லை. அவர் மற்ற இடங்களுக்கும் சென்று சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க வேண்டியதாயிற்று.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் அப்போஸ்தலர் பவுல் தீத்துவை கிரேத்தா தீவிலே சிறிதுகாலம் தங்கியிருக்குமாறு சொல்லுகிறார். அப்போஸ்தலர்கள் அந்தத் தீவிலே ஆரம்பித்து வைத்த ஊழியத்தைத் தொடர்ந்து செய்யுமாறு பவுல் தீத்துவுக்கு ஊழியப்பொறுப்பை ஒப்புக்கொடுக்கிறார்.

தீத்து பவுலின் ஆலோசனையின் பிரகாரம் கிரேத்தா தீவிலே தங்கியிருந்து கர்த்தருடைய ஊழியத்தைத் தொடர்ந்து செய்கிறார். தீத்துவின் ஊழியத்திற்கு சில பிரச்சனைகள் உண்டாயிற்று. மற்ற இடங்களில் காணப்பட்டது போல அல்லாமல், கிரேத்தா தீவிலே விசேஷித்த பிரச்சனைகள் உண்டாயிற்று. இப்படிப்பட்ட சூழ்நிலைகளில் பவுல் தீத்துவுக்கு இந்த நிருபத்தை எழுதுகிறார். தீத்து கிரேத்தா தீவார்மத்தியிலே கர்த்தருக்கு தீவிரமாய் ஊழியம் செய்யவேண்டும். சோர்வடைந்து விடாமல் உற்சாகத்தோடு ஊழியம் செய்யவேண்டும்.

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு எழுதின நிருபத்தில், அவருக்கு ஆலோசனை சொல்வதோடு, சபையிலுள்ள ஒவ்வொரு விசுவாசிகளுக்கும் எப்படி புத்திசொல்லவேண்டும் என்றும் இந்த நிருபத்தில் எழுதுகிறார்.

## 1 அதிகாரம்

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு வாழ்த்துதல் சொல்லி, அவருக்காக ஜெபம்பண்ணி இந்த நிருபத்தின் முன்னுரையை ஆரம்பிக்கிறார் (தீத்து 1:1-4). தீத்துவை கிரேத்தா தீவிலே விட்டு வந்ததற்கான நோக்கத்தை பவுல் அவருக்கு ஞாபகப்படுத்துகிறார்(தீத்து 1:5). கிரேத்தா தீவார் மத்தியிலே தீத்து எவ்வாறு ஊழியம் செய்யவேண்டுமென்று பவுல் அவருக்கு ஆலோசனை சொல்லுகிறார் (தீத்து 1:6-16).

### அப்போஸ்தலனாகிய பவுல் தீத்து 1 : 1-4

**தீத் 1:1. தேவனுடைய ஊழியக்காரனும், இயேசு கிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனுமாகிய பவுல், பொதுவான விசுவாசத்தின்படி உத்தம குமாரனாகிய தீத்துவுக்கு எழுதுகிறதாவது:**

**தீத் 1:2. பிதாவாகிய தேவனாலும், நம்முடைய இரட்சகராயிருக்கிற கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும், கிருபையும் இரக்கமும் சமாதானமும் உண்டாவதாக.**

**தீத் 1:3. பொய்யுரையாத தேவன் ஆதிகால முதல் நித்திய ஜீவனைக் குறித்து வாக்குத்தத்தம் பண்ணி, அதைக்குறித்த நம்பிக்கையைப்பற்றி தேவபக்திக்கேதுவான சத்தியத்தை அறிகிற அறிவும் விசுவாசமும் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களுக்கு உண்டாகும்படி,**

**தீத் 1:4. ஏற்றகாலங்களிலே நம்முடைய இரட்சகராகிய தேவனுடைய கட்டளையின்படி எனக்கு ஒப்புவிக்கப்பட்ட பிரசங்கத்தினாலே தமது வார்த்தையை வெளிப்படுத்தினார்.**

இந்த நிருபத்தின் ஆசிரியர் அப்போஸ்தலர் பவுல். இவர் புறஜாதியாருக்கு கர்த்தருடைய ஊழியக்காரராயிருக்கிறார். இவருடைய முந்திய பெயர் சவுல் என்பதாகும். இது ஒரு எபிரெயப்பெயர். கர்த்தரோ இவருடைய பெயரை பவுல் என்று மாற்றுகிறார். பவுல் என்பது புறஜாதியாரின் பெயர் (அப் 13:9,46,47). கர்த்தருடைய ஊழியக்காரர்கள் எல்லா காரியங்களிலும் கவனமாயிருக்கவேண்டும். சிறிய காரியங்களிலும், பெரிய காரியங்களிலும் கவனம் செலுத்த வேண்டும். தாங்கள் செய்கிற ஊழியத்தை ஜனங்கள் அங்கீகரிக்க வேண்டும். அதற்காக ஊழியக்காரர்கள் கர்த்தருடைய சித்தத்தின் பிரகாரமாகவும், ஆலோசனையின் பிரகாரமாகவும் சிந்தித்துச் செயல்படவேண்டும்.

அப்போஸ்தலர் பவுல் தன்னைப்பற்றி எழுதும் போது, "தேவனுடைய ஊழியக்காரனும், இயேசுகிறிஸ்துவினுடைய அப்போஸ்தலனுமாகிய பவுல்" (தீத்து 1:1) என்று சொல்லுகிறார். சபையில் நாம் எவ்வளவு பெரிய பொறுப்பு வகித்தாலும், சபையில் நமக்கு எவ்வளவு உயர்ந்த அந்தஸ்து இருந்தாலும், நாமெல்லோருமே தேவனுடைய ஊழியக்காரராகயிருக்கிறோம். பவுல் இந்த நிருபத்தில் தெய்வத்துவத்தைப்பற்றியும், பக்திவிருத்தியைப்பற்றியும் சுருக்கமாக எழுதுகிறார்.

சத்தியத்தை அறிகிற அறிவும், விசுவாசமும் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களுக்கு உண்டாக வேண்டும் (தீத்து 1:3). அப்போஸ்தலருடைய உபதேசம் தேவனால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களுடைய விசுவாசத்தோடு ஒத்துப்போகிறது. நாம் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினால் பரிசுத்தமாக்கப்படுகிறோம். நம்முடைய பரிசுத்தமாகுதலுக்கு விசுவாசமே முதலாவது படி.

சுவிசேஷம் சத்தியமாயிருக்கிறது. அது நிச்சயமானது. மேன்மையானது. சுவிசேஷம் ஆத்துமாவை இரட்சிக்கிற சத்தியமாயிருக்கிறது. கர்த்தருடைய பிள்ளைகளாகிய நம்மிடத்தில் தேவபக்திக் கேதுவான சத்தியத்தை அறிகிற அறிவும் விசுவாசமும் காணப்பட வேண்டும். நம்முடைய விசுவாசம் மனுஷருடைய கற்பனைகளையோ, கட்டுக்கதைகளையோ சார்ந்திருக்கக் கூடாது. தேவனுடைய சத்தியத்தை சார்ந்திருக்க வேண்டும். நம்முடைய விசுவாசத்திற்கு தேவனுடைய சத்திய வசனமே ஆதாரம். நம்முடைய விசுவாசம் தேவபக்திக்கேதுவானதாயிருக்க வேண்டும்.

சுவிசேஷத்தின் சத்தியம் எல்லாமே தெய்வபக்திக்கேதுவாயிருக்கிறது. நாம் சத்தியத்தை அறிகிற அறிவைப் பெற்றுக் கொண்டால் மாத்திரம் போதாது. சத்தியத்தை அறிந்திருக்கிறவர்கள் அதைத் தங்கள் இருதயத்தில் ஏற்றுக்கொள்ள வேண்டும். சத்திய வார்த்தையை நாம் விசுவாசிக்கவேண்டும். விசுவாச வார்த்தையை அறிக்கை செய்யவேண்டும். சத்திய வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து அதற்கேற்ற பிரகாரம் ஜீவிக்கவேண்டும்.

கர்த்தருடைய பிள்ளைகளாகிய நமக்குள் அறிவும் விசுவாசமும் உண்டாக வேண்டும். தேவபக்திக் கேதுவாக சத்தியத்தை நாம் அங்கீகரிக்கவேண்டும். இதுவே சுவிசேஷ ஊழியத்தின் சாரம். சுவிசேஷம் நமக்குள் சத்தியத்தை அறிகிற அறிவையும் விசுவாசத்தையும் உண்டு பண்ணுகிறது. கர்த்தருடைய பிள்ளைகளாகிய நம்மை தேவபக்தியும் விசுவாசமும் நித்திய ஜீவனுக்கேதுவாக வழிநடத்துகிறது. நித்திய ஜீவனைப்பற்றிய நம்பிக்கையை நமக்குக் கொடுக்கிறது. தேவன் பொய்யுரையாதவர். அவர் ஆதிகாலமுதல் நித்திய ஜீவனைக் குறித்து நமக்கு வாக்குத்தத்தம் பண்ணியிருக்கிறார். அந்த வாக்குத் தத்தத்தைக் குறித்த சத்தியத்தை நாம் அறிந்துகொள்ளவேண்டும். அதை விசுவாசிக்கவேண்டும். வாக்குத்தத்தத்தை நாம் நம்பவில்லையென்றால், கர்த்தருடைய வாக்குத்தத்தங்கள் நமக்குச் சித்திக்காது. தேவனால் பொய் சொல்ல முடியாது. அவர் வாக்குத்தத்தம்பண்ணும் போது, அது மெய்யாகவே நிறைவேறும்.

கர்த்தர் தம்முடைய பரிசுத்த வான்களுக்கு நித்திய ஜீவனைக் குறித்து வாக்குத்தத்தம் பண்ணியிருக்கிறார். இந்த வாக்குத்தத்தம் ஸ்திரமானது. ஆதிகாலமுதல் இந்த வாக்குத்தத்தம் இருக்கிறது. இந்த உலகம் சிருஷ்டிக்கப்படுவதற்கு முன்பாகவே தேவன் வாக்குத்தத்தம் பண்ணியிருக்கிறார். அவர் பொய்யுரையாத தேவன்.

கர்த்தருடைய வாக்குத்தத்தத்தை விசுவாசியாதவர்களும், மீறுகிறவர்களும் கடினமாய்த் தண்டிக்கப்படுவார்கள். தேவன் தம்முடைய கட்டளையை பிரசங்கத்தினாலே வெளிப்படுத்துகிறார். சுவிசேஷத்தைப்பற்றிய சத்தியம் ஒரு சிலருக்கு பைத்தியமாயிருக்கிறது. இரட்சிக்கப்படுகிற நமக்கோ இதுவே தேவபலனாயிருக்கிறது. கிறிஸ்துவின் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுவதை ஒரு சிலர் பைத்தியமான காரியம் என்று சொல்லுகிறார்கள். இது கெட்டுப் போகிறவர்களுக்கே பைத்தியமாயிருக்கிறது. கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிற கட்டளையைத் தேவன் பவுலுக்கு ஒப்புக்கொடுத்திருக்கிறார் (தீத்து 1:4).

கர்த்தர் தம்முடைய ஊழியத்தை நம்மிடத்தில் நம்பி ஒப்புக் கொடுத்திருக்கிறார். கர்த்தருடைய ஊழியத்தில் நாம் பங்குபெறுவதற்காக நாம் பெருமைப்படக் கூடாது. சுவிசேஷத்தினால் உண்டாகும் கனத்தையும் மகிமையையும் நமக்குச் சொந்தமாக்கிக்கொள்ளக் கூடாது. துதி கன மகிமை அனைத்தும் நம்முடைய கர்த்தருக்கு மாத்திரமே சொந்தம். சுவிசேஷத்ததைப் பிரசங்கிக்கிற ஊழியத்தை கர்த்தர் நம்மிடத்தில் நம்பி ஒப்புக் கொடுத்திருக்கிறார். தம்முடைய ஊழியத்தை செய்யுமாறு நம்மை நியமித்திருக்கிறார்.

யாரெல்லாம் தேவனால் அழைக்கப்பட்டிருக்கிறார்களோ, யாரிடத்திலெல்லாம் தேவன் தம்முடைய ஊழியத்தை ஒப்புக்கொடுத்திருக்கிறாரோ அவர்களெல்லோரும் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பிரசங்கம் பண்ண வேண்டும். அவருடைய வார்த்தையை அறிவிக்கவேண்டும். இந்தக் கட்டளை நம்முடைய இரட்சகராகிய தேவனுடைய கட்டளையாயிருக்கிறது. தேவன் அழைக்காமல் நாம் யாரும் அவருக்கு ஊழியம் செய்யக்கூடாது. மனுஷருடைய அழைப்பை நம்பி நாம் ஊழியம் செய்தால், ஊழியத்தில் ஆசீர்வாதம் இருக்காது.

அப்போஸ்தலர் பவுல் இந்த நிருபத்தை தீத்துவுக்கு எழுதுகிறார். தீத்து என்பது கிரேக்க பாஷையிலுள்ள ஒரு பெயர். அவர் புறஜாதியாராகிய கிரேக்கராயிருந்தவர். புறஜாதியாராகிய தீத்துவையும் கர்த்தர் தம்முடைய குடும்பத்தில் அங்கீகரித்திருக்கிறார். தம்முடைய ஊழியத்தை தீத்துவிடத்திலும் நம்பி ஒப்புக் கொடுத்திருகிறார். தேவனுடைய கிருபை எல்லோருக்கும் இலவச ஈவாகக் கொடுக்கப்படுகிறது. கிருபை சர்வவல்லமையுள்ளது. தீத்து புறஜாதியாராகயிருந்தாலும், கர்த்தர் அவருக்கும் கிருபையைக் கொடுத்து, அவரைத் தம்முடைய ஊழியத்தில் வல்லமையாய்ப் பயன்படுத்துகிறார். தேவனுடைய கிருபை பெரிது. அவரால் கூடாத காரியம் ஒன்றுமில்லை.

அப்போஸ்தலர் பவுல் தீத்துவைப் பற்றிச் சொல்லும்போது "உத்தம குமாரனாகிய தீத்து" (தீத் 1:1) என்று சொல்லுகிறார். இவர் சரீரப்பிரகாரமாக பவுலுக்கு குமாரனல்ல. பொதுவான விசுவாசத்தின்படி தீத்து பவுலுக்கு குமாரனாயிருக்கிறார். பொதுவான விசுவாசம் என்பது இரட்சிக்கப்பட்டிருக்கிற எல்லோரிடத்திலும் காணப்படுகிற பொதுவான விசுவாசமாகும். மறுஜென்மம் அடைந்திருக்கிற அனைவரிடத்திலும் பொதுவான விசுவாசம் உண்டு.

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார். அவருக்காக ஜெபிக்கிறார். கிருபையும் இரக்கமும், சமாதானமும் உண்டாவதாக என்று சொல்லி வாழ்த்துகிறார். எல்லா ஆசீர்வாதங்களுக்கும் கிருபையே அஸ்திபாரமாகயிருக்கிறது. சமாதானம், இரக்கம், எல்லா நன்மைகள் ஆகியவையெல்லாம் கிருபையாகிய நீரூற்றிலிருந்து புறப்பட்டு வருகிறது. நாம் தேவனுடைய கிருபையையும் சிலாக்கியத்தையும் பெற்றுக் கொள்ளும் போது, நமக்கு சகல ஆசீர்வாதங்களும் உண்டாயிருக்கும்.

அப்போஸ்தலர் பவுல் தீத்துவை வாழ்த்தும் போது, "பிதாவாகிய தேவனாலும், நம்முடைய இரட்சராகயிருக்கிற கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலும்" கிருபையும் இரக்கமும் சமாதானமும் உண்டாவதாக என்று சொல்லுகிறார். பிதாவாகிய தேவனே எல்லா நன்மைகளுக்கும் ஆதாரமாகயிருக்கிறவர். எல்லா ஆசீர்வாதங்களும் எல்லா ஆறுதல்களும் பிதாவாகிய தேவனிடத்திலிருந்தே நமக்கு வருகிறது. இவை பிதாவினிடத்திலிருந்து வருவதுபோல, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலும் நமக்கு வருகிறது. எல்லாமே கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினால், பிதாவாகிய தேவனிடமிருந்து நமக்கு வருகிறது.

## கிரேத்தா தீவு
## தீத் 1:5

**தீத் 1:5. நீ குறைவாயிருக்கிறவைகளை ஒழுங்குபடுத்தும்படிக்கும், நான் உனக்குக் கட்டளையிட்டபடியே, பட்டணங்கள்தோறும் மூப்பரை ஏற்படுத்தும்படிக்கும், உன்னைக் கிரேத்தாதீவிலே விட்டுவந்தேனே.**

அப்போஸ்தலர் பவுல் கிரேத்தா தீவிலே சிறிது காலம் மாத்திரமே தங்கியிருந்து ஊழியம் செய்தார். அந்தக் கொஞ்சக்காலத்திற்குள்ளே அப்போஸ்தலர் பவுலினால் தன்னுடைய ஊழியத்தை நிறைவு செய்ய முடியவில்லை. ஒரு சில காரியங்களை அவரால் ஒழுங்குபடுத்த முடியவில்லை. அவர் கிரேத்தா தீவிலிருந்து புறப்பட்டுப்போகும் போது, பவுல் ஒழுங்குப்படுத்தாத அந்தக் காரியங்கள் ஒரு குறைவாகவே இருந்தது.

அப்போஸ்தலர் பவுல் சுவிசேஷத்தை கருத்தாய்ப் பிரசங்கம் பண்ணுகிறவர். ஓரிடத்தில் அவர் சுவிசேஷத்தைப் பிரசங்கம் பண்ணுகிற போது, மற்ற இடங்களுக்கும் போய் சுவிசேஷத்தைப் பிரசங்கம் பண்ணுகிற தேவை உண்டாயிற்று. ஆகையினால் அவரால் ஒரே இடத்தில் அதிககாலம் தங்கியிருந்து ஊழியம் செய்ய முடியவில்லை. மற்ற இடங்களுக்கும் அவசரமாகப் பிரயாணம் செய்தார்.

அப்போஸ்தலர் பவுல் பல இடங்களுக்கும் பிரயாணம் செய்து சுவிசேஷத்தைப் பிரசங்கம் செய்தாலும், தான் ஊழியம் செய்த எந்த ஸ்தலத்தையும் அவர் மறந்துவிடவில்லை. பவுல் கர்த்தருடைய ஊழியத்தை உண்மையாயும் கருத்தாயும் செய்கிறவர். ஓரிடத்தில் அவர் சுவிசேஷ விதையை விதைத்த பின்பு, அதற்கு நீர்பாய்ச்சுவதற்கும், கொத்தி எருபோடுவதற்கும், தனக்கு நம்பிக்கைக்குரிய ஊழியக்காரர்களை அந்த ஊழியஸ்தலங்களை நியமிக்கிறார்.

அப்போஸ்தலர் பவுல் மிகுந்த மனத்தாழ்மையுள்ளவர். பயபக்தியோடு ஊழியம் செய்கிறவர். தன்னுடைய ஊழியத்திற்கு உதவி தேவைப்படும் போது, இருதயத்தில் பெருமைப்படாமல், மனத்தாழ்மையோடு, தன்னுடைய உடன் ஊழியரின் உதவியை எதிர்பார்க்கிறார். பவுலிடத்திலிருக்கிறது போல அவர்களிடத்தில் விசேஷித்த தாலந்துகளும், விசேஷித்த வரங்களும் இல்லாமற் போகலாம். அவர்களுக்கு பவுலைப் போல நேர்த்தியாய்ப் பிரசங்கம் பண்ணத் தெரியாமலும் இருக்கலாம். அவர்கள் வரங்களில் குறைவுள்ளவர்களாகயிருந்தாலும், பவுல் தான் ஆரம்பித்த ஊழியத்தில், அவர்களையும் பயன்படுத்த ஆயத்தமாயிருக்கிறார்.

தீத்து அப்போஸ்தல ஊழியத்திற்கு அழைக்கப்படவில்லை. அவர் பவுலைப்போல ஒரு அப்போஸ்தலரும் அல்ல. சாதாரணமாக ஊழியம் செய்கிறவர்தான். ஆனாலும் பவுல் அவரிடத்தில் ஊழியத்தைப் பொறுப்பாய் ஒப்புக் கொடுக்கிறார். சபையிலே மூப்பரை ஏற்படுத்தும்படி பவுல் தீத்துவுக்கு அதிகாரங் கொடுக்கிறார். பவுல் மற்ற ஊழியக்காரர்களுக்கு ஊழியப் பொறுப்புக்களைக் கொடுக்கும் போது, அவர்களை ஏதாவது ஒரு குறிப்பிட்ட பட்டணத்தில் ஊழியம் செய்யுமாறு நியமிப்பது வழக்கம். ஆனால் தீத்துவையோ பட்டணங்கள்தோறும் மூப்பரை ஏற்படுத்தும் படிக்கு கட்டளையிடுகிறார்.

ஒவ்வொரு பட்டணத்திலும் சபைகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. சபை எண்ணிக்கையில் பெருகும் போது, விசுவாசிகளின் எண்ணிக்கை அதிகரிக்கும் போது, சபைகளில் சில குழப்பங்கள் ஏற்படலாம். சபையின் காரியங்களை தீத்து மாத்திரமே தனிமையாக கவனிப்பது இயலாத காரியம். அவருக்கு உதவி தேவைப்படுகிறது. தீத்து கிரேத்தா தீவிலுள்ள ஒவ்வொரு பட்டணத்திற்கும் பிரயாணம் செய்து ஊழியம் செய்யவேண்டும். தீத்து ஒரு பட்டணத்தில் இல்லாதபோது, அந்தப் பட்டணத்திலுள்ள சபை ஊழியத்தை கவனிக்கும் பொறுப்பை மூப்பர்களிடத்தில் ஒப்புக்கொடுக்கிறார்.

அப்போஸ்தலர் பவுல் கிரேத்தா தீவிலே சிறிதுகாலம் மாத்திரமே தங்கியிருந்து ஊழியம் செய்தார். பட்டணங்கள் தோறும் சபைகளை ஸ்தாபித்தார். தனக்கிருந்த கொஞ்சக்காலத்தில், அவரால் சபைகளை நேர்த்தியாக ஸ்தாபிக்க முடியவில்லை. சபையின் அலுவல்களைக் கவனிப்பதற்கு பொறுப்பான விசுவாசிகளை பவுலால் நியமிக்க முடியவில்லை. தான் செய்த ஊழியத்தை முழுமையாக நிறைவேற்றாமல், அவற்றை அரைகுறையாக விட்டுவிட்டு, பவுல் கிரேத்தா தீவை விட்டு புறப்பட்டுப்போகிறார்.

தீத்துவும் கிரேத்தா தீவிலே அதிகக்காலம் தங்கியிருக்க வேண்டு மென்பது பவுலின் விருப்பமல்ல. அவர் அங்கு கொஞ்சகாலம் தங்கியிருந்து, கிரேத்தா தீவிலுள்ள சபைகளிலே குறைவாயிருக்கிறவைகளை ஒழுங்கு படுத்தினால் போதுமானது என்று பவுல் தீர்மானித்திருக்கிறார். இதற்காகவே பவுல் தீத்துவை கிரேத்தா தீவுக்கு அனுப்புகிறார். மாரிகாலத்தில் பவுல் நிக்கபோலியில் தங்கியிருக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார். தீத்து கிரேத்தா தீவில் தனக்குக் கொடுக்கப்பட்ட ஊழியத்தை நிறைவேற்றிய பின்பு, அவர் நிக்கபோலியில் இருக்கிற பவுலினிடத்தில், மாரிகாலத்திற்குள் திரும்பிவரவேண்டும்.

இதன்பின்பு பவுல் தீத்துவை கொரிந்துவுக்கு அனுப்பினார். தீத்து பவுலோடு ரோமாபுரியில் தங்கியிருந்தார். பவுல் தீத்துவை தல்மத்தியாவுக்கு அனுப்புகிறார். தீத்து தல்மத்தியாவை விட்டு வேறு எங்கு போனாரென்றோ, அதன்பின்பு தீத்துவுக்கு என்ன சம்பவித்தது என்றோ, வேதாகமத்தில் அவரைப்பற்றி எந்தக் குறிப்பும் காணப்படவில்லை.

அப்போஸ்தலருடைய ஊழியம் வேத வாக்கியத்தின்படி நியமிக்கப்பட்டிருக்கிறது. சபைகளில் குறைவாயிருக்கிறவைகளை ஒழுங்குபடுத்துவது அப்போஸ்தலரின் ஊழியம். இதுவும் தெய்வீக ஊழியம்தான். கர்த்தர் தாமே அப்போஸ்தலருக்கு ஆவிக்குரிய இந்த நியமங்களைக் கொடுத்திருக்கிறார். அப்போஸ்தலர்கள் தங்களுடைய அப்போஸ்தல அதிகாரத்தைப் பயன்படுத்தி, சபைகளிலே மூப்பர்களை ஏற்படுத்துகிறார்கள்.

ஓரிடத்தில் சபையை ஸ்தாபிப்பதும், ஸ்தாபிக்கப்பட்ட சபையை ஒழுங்குபடுத்துவதும்எளிதான ஊழியமல்ல. கடினமான ஊழியம். அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு இப்படிப்பட்ட கடினமான ஊழியத்தைக் கொடுத்திருக்கிறார். பவுல் தாமே கிரேத்தா தீவிலே சிறிது காலம் ஊழியம் செய்திருக்கிறார். ஆனாலும் எல்லா காரியங்களையும் அவரால் ஒழுங்குபடுத்த முடியவில்லை. ஊழியத்தில் சில காரியங்கள் குறைவாயிருந்தது. சபையில் ஒழுங்கில்லாமல் குறைபாடுகள் காணப்பட்டால், அது சபையின் வளர்ச்சிக்குத் தடையாகயிருக்கும்.

குறைகளை கவனிக்காமல் விட்டு விட்டால், அந்தக் குறைகள் தொற்று நோயைப் போல எல்லா விசுவாசிகளுக்கும் பரவிவிடும். அதன்பின்பு சபையில் பக்திவிருத்தி இருக்காது. சபையார் ஜீவனுள்ள தேவனை ஆவியோடும் உண்மையோடும் ஆராதிக்கமாட்டார்கள். அவர்களுடைய ஆராதனையிலும் ஜீவன் இராது. அவர்களுக்குள்ளும் ஆவிக்குரிய ஜீவன் இருக்காது. சபைகளிலுள்ள குறைகளை நீக்கி, ஒழுங்குபடுத்த வில்லையென்றால், விசுவாசிகளுடைய ஆவிக்குரிய ஜீவியம் மரித்துப்போகும்.

தன் மூலமாய் ஸ்தாபிக்கப்பட்ட சபைகள் நேர்த்தியாய் வளர்ச்சி பெறவேண்டுமென்று பவுல் விரும்புகிறார். சபையாருக்கு ஆரோக்கியமான உபதேசத்தைக் கொடுக்கவேண்டுமென்பது பவுலின் விருப்பம். ஆனால் அப்போஸ்தலர் பவுலால் கிரேத்தா தீவிலே தங்கியிருந்து ஊழியம் செய்யமுடியவில்லை. இதற்காக அவர் தீத்துவை கிரேத்தா தீவுக்கு அனுப்புகிறார். அங்கு அவர் என்னென்ன ஊழியம் செய்ய வேண்டுமென்று பவுல் ஏற்கெனவே கட்டளை கொடுத்திருக்கிறார். தான் தீத்துவுக்குக் கொடுத்த கட்டளைகளை மறுபடியும் இந்த நிருபத்தின் மூலமாக அவருக்கு ஞாபகப்படுத்துகிறார்.

தீத்து பட்டணங்கள்தோறும் மூப்பர்களை ஏற்படுத்தவேண்டும். இவர்கள் சபையின் அன்றாட காரியங்களைக் கவனிக்க வேண்டும். சபையின் சாதாரண காரியங்களைக் கவனிப்பதோடு, ஊழியக்காரியங்களையும் கவனிக்க வேண்டும். சபையின் மூப்பர்கள் சுவிசேஷ ஊழியராயும் இருக்கிறார்கள். இவர்கள் கிறிஸ்துவின் ஊழியத்தில் பங்குபெற வேண்டும். சபையிலுள்ள விசுவாசிகளுக்கு ஆவிக்குரிய போஜனம் கொடுக்கவேண்டும்.

சபையில் ஊழியம் நிரந்தரமாய் நடைபெறவேண்டும். ஊழியமில்லாத சபை குறைவுள்ள சபையாகவே இருக்கும். சபையிலுள்ளவிசுவாசிகளின் எண்ணிக்கை அதிகரிக்கும் போது, அவர்களுடைய ஆவிக்குரிய தேவைகளைச் சந்திப்பதற்காகவும், சபையின் காரியங்களைக் கவனிப்பதற்காகவும் போதுமான எண்ணிக்கையில் மூப்பர்களை ஏற்படுத்த வேண்டும். இவர்கள் கர்த்தருடைய பரிசுத்தவான்களைப் பூரணப்படுத்தி, கிறிஸ்துவின் சபையைப் போஷிக்கவேண்டும்.

விசுவாசம் கேள்வியினாலே வருகிறது. கர்த்தருடைய வசனத்தைத் தொடர்ந்து கேட்பதன் மூலமாய், விசுவாசம் நமக்குள் ஸ்திரப்படுகிறது. அறியாமை நம்முடைய ஆவிக்குரிய ஜீவியத்தை சீரழித்து விடும். சத்தியத்தை அறியாதவர்கள் சத்துருவினால் வஞ்சிக்கப்படுவார்கள். தங்களை தீங்குசெய்ய ஒப்புக்கொடுத்துவிடுவார்கள். சபையில் உபதேச ஊழியம் அதிகமாய்த் தேவைப்படுகிறது. இவர்கள் விசுவாசிகளை கர்த்தருடைய உபதேசத்தினால் உற்சாகப்படுத்த வேண்டும். இந்த ஊழியங்களையெல்லாம் நிறைவேற்றுவதற்காக அப்போஸ்தலர் பவுல் தீத்துவை கிரேத்தா தீவிலே விட்டு வந்திருக்கிறார். இவர் அங்கு குறைவாயிருக்கிறவைகளை ஒழுங்குபடுத்த வேண்டும். பட்டணங்கள்தோறும் மூப்பரை ஏற்படுத்தும்படிக்கு பவுல் தீத்துவுக்கு ஏற்கெனவே கட்டளையிட்டிருக்கிறார். அவருடைய கட்டளையின் பிரகாரம் தீத்து செயல்படவேண்டும்.

சபையின் எல்லா காரியங்களும் ஒழுங்கும் கிரமுமமாய் நடைபெறவேண்டும். தேவன் சீனாய் மலையிலே மோசேக்கு தம்முடைய பிரமாணத்தை வெளிப்படுத்தினார். நியாயப்பிரமாணத்தின் காரியங்களெல்லாம், தேவன் மோசேக்கு வெளிப்படுத்தினது போல நடைபெற வேண்டும். நாம் இப்போது சுவிசேஷத்தின் காலத்திலிருக்கிறோம். கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாமெல்லோரும் கிறிஸ்துவினுடைய கட்டளையின் பிரகாரமாயும், அவருடைய ஊழியக்காரர் கொடுக்கிற புத்திமதிகளின் பிரகாரமாயும் செயல்படவேண்டும்.

சபையில் மனுஷருடைய பாரம்பரியங்களுக்கோ அல்லது மனுஷருடைய புதுமையான கண்டு பிடிப்புக்களுக்கோ முக்கியத்துவம் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. சுவிசேஷகர் தன் சுயமுயற்சியினால் ஊழியம் செய்வதில்லை. யாரும் தன்னைத் தானே சுவிசேஷகராக ஆக்கிக்கொள்ள முடியாது. தேவன் தாமே தம்முடைய தீர்மானத்தின் பிரகாரமாக நமக்கு ஊழியத்தைக் கொடுக்கிறார். நம்மை ஊழியக்காரர்களாக ஏற்படுத்துகிறார்.

## மூப்பர்
## தீத் 1 : 6-9

**தீத் 1:6. குற்றஞ்சாட்டப்படாதவனும், ஒரே மனைவியையுடைய புருஷனும், துன்மார்க்கரென்றும் அடங்காதவர்களென்றும் பேரெடுக்காத விசுவாசமுள்ள பிள்ளைகளை உடையவனுமாகிய ஒருவனிருந்தால் அவனையே ஏற்படுத்தலாம்.**

**தீத் 1:7. ஏனெனில், கண்காணியானவன் தேவனுடைய உக்கிராணக்காரனுக்கேற்றவிதமாய், குற்றஞ்சாட்டப்படாதவனும், தன் இஷ்டப்படி செய்யாதவனும், முற்கோபமில்லாதவனும், மதுபானப்பிரியமில்லாதவனும், அடியாதவனும், இழிவான ஆதாயத்தை இச்சியாதவனும்,**

**தீத் 1:8. அந்நியரை உபசரிக்கிறவனும், நல்லோர்மேல் பிரியமுள்ளவனும், தெளிந்த புத்தியுள்ளவனும், நீதிமானும், பரிசுத்தவானும், இச்சையடக்கமுள்ளவனும்,**

**தீத் 1:9. ஆரோக்கியமான உபதேசத்தினாலே புத்திசொல்லவும், எதிர்பேசுகிறவர்களைக் கண்டனம் பண்ணவும் வல்லவனுமாயிருக்கும்படி, தான் போதிக்கப்பட்டதற் கேற்ற உண்மையான வசனத்தை நன்றாய்ப் பற்றிக் கொள்ளுகிறவனுமாயிருக்க வேண்டும்.**

பட்டணங்தோறும் மூப்பரை ஏற்படுத்தும்படிக்கு பவுல் தீத்துவுக்குக் கட்டளைகொடுக்கிறார். தன்னுடைய இஷ்டப்படி தீத்து மூப்பரை ஏற்படுத்த முடியாது. மூப்பருக்கு என்னென்ன தகுதிகளெல்லாம் இருக்கவேண்டுமென்று பவுல் இங்கு தெளிவாகச் சொல்லுகிறார். மூப்பரை, "கண்காணியானவன்" என்றும் அழைக்கிறார்.

மூப்பர்கள் குற்றம் சாட்டப் படாதவராகயிருக்க வேண்டும். இப்பிரபஞ்சத்தில் பாவம் செய்யாதவர் ஒருவருமில்லை. எல்லோரும் குறைவுள்ளவர்கள். பரிபூரணமான பரிசுத்தர் யாருமில்லை. ஆனாலும் சபையின் மூப்பரானவர் குற்றம் சாட்டப்படாதவராகயிருக்கவேண்டும். ஒரு குற்றமும் செய்யாதவரை கண்டுபிடிப்பது இயலாத காரியம். ஊழியக்காரர்மீது ஜனங்கள் எளிதாகக் குற்றம் சொல்லிவிடுவார்கள். அப்போஸ்தலர்கள் மீது குற்றம் சொன்னார்கள். நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மீதும் குற்றம் சொன்னார்கள். பவுல் இங்கு "குற்றம் சாட்டப்படாதவன்" என்று சொல்லும் வார்த்தைக்கு, "தீயசுபாவத்திற்கு அடிமையாயிராதவன்" என்பதே பொருளாகும்.

மூப்பரானவர் ஒழுக்கமுள்ளவராகயிருக்க வேண்டும். கற்புள்ளவராகயிருக்க வேண்டும். குடும்பத்தில் தன் மனைவிக்கும் பிள்ளைகளுக்கும் உண்மையுள்ளவராகயிருக்க வேண்டும். மூப்பர் மாத்திரம் ஒழுக்கமுள்ளவராகயிருந்தால் போதாது, அவருடைய பிள்ளைகளும் ஒழுக்கமுள்ளவர்களாகயிருக்க வேண்டும். மூப்பர் தன் குடும்பத்தாரோடு கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறவராகவும், நன்மை செய்கிறவராயும் இருக்கவேண்டும்.

மூப்பருடைய பிள்ளைகள் அடங்காதவர்கள் என்று பெயரெடுக்கக் கூடாது. அவர்கள் விசுவாசமுள்ள பிள்ளைகளாகயிருக்கவேண்டும். மூப்பர் தன் பிள்ளைகளை விசுவாசத்தில் வளர்க்க வேண்டும். கிறிஸ்துவின் உபதேசத்திற்கு ஏற்ற பிரகாரமாக ஜீவிக்கவேண்டும். ஒரு நல்ல தகப்பன் தன் பிள்ளைகளை எப்படி வளர்க்க வேண்டுமோ, அப்படியே மூப்பரானவரும் தன் பிள்ளைகளை வளர்க்கவேண்டும்.

மூப்பருடைய பிள்ளைகள் துன்மார்க்கர் என்றோ, அடங்காதவர்கள் என்றோ தீயபெயர் எடுக்கக்கூடாது. ஒரு குற்றமும் செய்யாதவர்களைக்கூட இந்த உலகம் பொய்யாய்க் குற்றம் சொல்லும். நல்லவர்களைக்கூட தீயவர்கள் என்று சொல்லி தூஷிக்கும். நாம் இப்படிப்பட்ட பிரபஞ்சத்தில் ஜீவிக்கிறபடியினால், நம்மீது யாரும் எந்தக் குற்றமும் சுமத்தாதபடி, மிகுந்த கவனத்தோடு ஜீவிக்கவேண்டும்.

பிள்ளைகள் கீழ்ப்படிதலுள்ளவர்களாகவும், விசுவாசமுள்ளவர்களாகவும் இருக்கும் போது, அவர்கள் பெற்றோரின் விசுவாசத்திற்கும், நற்குணத்திற்கும் நல்ல எடுத்துக்காட்டுக்களாக இருக்கிறார்கள். பெற்றோர் தங்கள் குடும்பத்தை நன்றாய் விசாரிக்கிறவர்களாயிருக்கும் போது, அவர்கள் சபையை விசாரிக்கிற கிருபையைப் பெற்றிருப்பார்கள். இப்படிப்பட்டவர்களையே மூப்பராக ஏற்படுத்த வேண்டுமென்று பவுல் தீத்துவுக்கு கட்டளையிடுகிறார்.

பவுல் மூப்பரை "கண்காணி" என்னும் பெயராலும் அழைக்கிறார். கண்காணியினுடைய ஊழியத்தைத் தெளிவுபடுத்துகிறார். கண்காணியானவன் தேவனுடைய உக்கிராணக்காரனுக் கேற்றபடி ஊழியம் செய்யவேண்டும் (தீத் 1:7). மேய்ப்பர்கள் மந்தையை நிர்வாகம்பண்ணுகிறார்கள். மந்தையிலுள்ள ஆடுகளை மேற்பார்வையிடுகிறார்கள். இப்படிப்பட்ட தலைமைத்துவ ஊழியத்தைச் செய்கிறவர்கள், சபையிலுள்ள விசுவாசிகளுக்கு நல்ல முன்மாதிரிகளாகயிருக்க வேண்டும். ஆகையினால்தான் மூப்பர்கள் தங்கள் சொந்தக் குடும்பத்தை நன்றாய் விசாரிக்க வேண்டுமென்று பவுல் சொல்லுகிறார். தங்கள் குடும்ப ஜீவியத்தில்கூட மூப்பர்கள் குற்றசாட்டப்படாதவர்களாகயிருக்க வேண்டும்.

மூப்பர் தன் சுயஇஷ்டப்படி செய்யக்கூடாது. தன்னுடைய விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமென்று துடிக்கக் கூடாது. இவர் சபைக்கு மூப்பராகயிருக்கிறார். சபையில் ஏராளமான ஆத்துமாக்கள் இருக்கிறார்கள். சில விஷயங்களில் மூப்பர் சபையாரின் கருத்துக்களையும் தெரிந்து கொள்ள வேண்டும். அவர்களெல்லோரையும் பட்சபாதமில்லாமல் நேசிக்க வேண்டும். அவர்களுடைய கருத்துக்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். மற்றவர்களைப்பற்றிச் சிந்திக்காமல், தன்னுடைய விருப்பத்தை மாத்திரம் நிறைவேற்றவேண்டுமென்று மூப்பர் ஒருபோதும் நினைக்கக்கூடாது.

சபையிலுள்ள விசுவாசிகளின் கருத்துக்களைக் கேட்பதும், அவர்களுடைய ஆலோசனைகளைப் பெற்றுக் கொள்வதும் கர்த்தருடைய ஊழியக்காரருக்கு நல்ல சுபாவமாகயிருக்கும். பவுல் எல்லோரையும் ஆதாயப்படுத்திக் கொள்ளும்படி, அவர் எல்லோருக்கும் எல்லாமானார். மூப்பர்கள் சபையிலுள்ள எல்லா விசுவாசிகளுக்கும் மூப்பராயிருக்கிறார்கள். எல்லா விசுவாசிகளையும் நிர்வாகம்பண்ணும் படிக்கு, அவர் தன்னுடைய சுயஇஷ்டப்படி செய்யாமல், கர்த்தருடைய இஷ்டப்படி செயல்படவேண்டும்.

மூப்பரானவர் முற்கோப மில்லாதவராயிருக்க வேண்டும். தங்களைத்தாங்களே ஆளுகை செய்ய முடியாதவர்களால் சபையை ஆளுகை செய்ய முடியாது. தங்களுடைய கோபத்தையே கட்டுப்படுத்த முடியாத முற்கோபிகளினால், சபையாரைக் கட்டுப்படுத்த முடியாது.

மூப்பர் மதுபானப்பிரியராயிருக்கக் கூடாது. மதுபானம் அருந்தி வெறித்திருக்கிறவர், தன் சுயநினைவை இழந்திருப்பார். மூப்பர் மதுபானப்பிரியராயிருக்கும் போது தேவனுடைய நாமம் தூஷிக்கப்படும். தேவனுடைய நாமத்தை மகிமைப்படுத்துவதற்காக ஊழியம் செய்ய வேண்டியவர், மதுபானப்பிரியராகயிருந்து தேவனுடைய நாமத்தைத் தூஷித்து விடுவார். மூப்பர் எல்லோருக்கும் முன்பாக கண்ணியமுள்ளவராகவும், நல்நடத்தையுள்ளவராகவும் இருக்க வேண்டும். மூப்பர் மதுபானப்பிரியராகயிருக்கும் போது அவர் தனக்கும், தன்னுடைய ஊழியத்திற்கும் களங்கத்தை ஏற்படுத்திவிடுகிறார்.

மூப்பர் இழிவான ஆதாயத்தை இச்சிக்கக்கூடாது. இப்பிரபஞ்சத்தின் ஆசைகளை நிறைவேற்றுவதற்காக யாரும் ஊழியம் செய்யக்கூடாது. இழிவான ஆதாயத்தைப் பெற்றுக்கொள்வதற்கு கர்த்தருடைய ஊழியத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்தக் கூடாது. இப்பிரபஞ்சம் நம்முடைய நித்திய வாசஸ்தலமல்ல. பரலோகமே நம்முடைய நித்திய குடியிருப்பு. மூப்பர்கள் விசுவாசிகளை பரலோகத்திற்குள் பிரவேசிக்க தகுதிப்படுத்தவேண்டும். இதுவே மூப்பரின் ஊழியம். மூப்பர் இப்பிரபஞ்சத்திலுள்ள இழிவான ஆதாயத்தை இச்சிக்கும் போது, சபையாரும் இப்பிரபஞ்சத்தின்மீது ஆசை வைத்து பாவம் செய்வார்கள். உலகசிநேகம் தேவனுக்கு விரோதமான பகை. நாம் எப்போதுமே நம்முடைய நித்திய ஜீவனை நோக்கிப் பார்க்க வேண்டும். இப்பிரபஞ்சத்தையே பார்க்காமல், பரலோகத்தையும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

மூப்பர் அந்நியரை உபசரிக்கிறவராயிருக்க வேண்டும் (தீத் 1:8). நம்முடைய தகுதிக்கேற்ப, நம்மிடத்திலுள்ள வசதிகளுக்கேற்ப, சமயம் கிடைக்கும்போதெல்லாம் நாம் அந்நியரை உபசரிக்க வேண்டும். அந்நியரை உபசரிக்கிற சுபாவம் கர்த்தருடைய ஊழியக்காரருக்கு மேன்மையான சுபாவமாயிருக்கும்.

மூப்பர் நல்லோர் மேலும், நற்காரியங்கள் மேலும் பிரியமுள்ளவராயிருக்க வேண்டும். அவர்கள் தெளிந்த புத்தியுள்ளவராயிருக்க வேண்டும். ஆவிக்குரிய ஊழியத்திலும், தன்னுடைய தொழிலும் மூப்பர் தெளிந்த புத்தியுள்ளவராயிருந்து கர்த்தருடைய நாமத்தை மகிமைப்படுத்தவேண்டும். நல்ல நிர்வாக திறமையுடையவராயிருக்க வேண்டும். நீதியுள்ள நீதிமானாகயிருக்க வேண்டும். தன்னுடைய அன்றாட அலுவல்களைக் கவனிக்கும் விஷயத்தில் மூப்பர் உண்மையுள்ளவராயும், ஒழுக்கமுள்ளவராயும் இருக்கவேண்டும். அவர் பரிசுத்தமுள்ளவராகவும் இருக்க வேண்டும். இச்சையடக்கமுள்ளவராகவும் இருக்கவேண்டும்.

மூப்பருக்கு ஆரோக்கியமான உபதேசத்தினாலே புத்திசொல்ல தெரிந்திருக்க வேண்டும். இவர் போதிக்கப்பட்டவராக இருக்க வேண்டும். விசுவாசத்தையும், ஊழியத்தையும், வசனத்தையும் பற்றிக் கொள்கிறவர்களாக இருக்க வேண்டும். தனக்குப் போதிக்கப்பட்ட சத்தியங்களை மூப்பர் கைவிட்டுவிடாமல் பற்றிக் கொள்ள வேண்டும். தங்களுடைய உபதேசத்திலும், ஜீவியத்திலும் மூப்பரானவர் சத்தியத்தைப் பற்றிக் கொண்டு, கர்த்தருடைய வார்த்தைக்கு உண்மையுள்ளவராய் உபதேசம்பண்ணவேண்டும்.

மூப்பருக்கு ஆரோக்கியமான உபதேசத்தினாலே புத்தி சொல்ல தெரிந்திருக்க வேண்டும். எதிர் பேசுகிறவர்களை அவர் கண்டனம் பண்ணவும் வல்லவராயிருக்க வேண்டும். மூப்பர் ஸ்திரமில்லாமலிருந்தால் அவரால் யாருக்கும் ஆரோக்கியமான உபதேசத்தினாலே புத்திசொல்ல முடியாது. மூப்பர் நிச்சயமில்லாதவராகயிருந்தால், எதிர்பேசுகிறவர்களை கண்டனம்பண்ண முடியாது. சபையின் மூப்பரானவர் உண்மையான வசனத்தை நன்றாய்ப் பற்றிக்கொள்கிறவராயிருக்கவேண்டும்.

## கண்டிப்பாய் கடிந்துகொள்
## தீத் 1 : 10-16

**தீத் 1:10. அநேகர், விசேஷமாய் விருத்தசேதனமுள்ளவர்கள், அடங்காதவர்களும், வீண்பேச்சுக்காரரும், மனதை மயக்குகிறவர்களுமாயிருக்கிறார்கள்.**

**தீத் 1:11. அவர்களுடைய வாயை அடக்க வேண்டும்; அவர்கள் இழிவான ஆதாயத்துக்காகத் தகாதவைகளை உபதேசித்து, முழுக்குடும்பங்களையும் கவிழ்த்துப்போடுகிறார்கள்.**

**தீத் 1:12. கிரேத்தாதீவார் ஓயாப் பொய்யர், துஷ்டமிருகங்கள், பெருவயிற்றுச் சோம்பேறிகள் என்று அவர்களிலொருவனாகிய அவர்கள் தீர்க்க தரிசியானவனே சொல்லியிருக்கிறான்.**

**தீத் 1:13. இந்தச் சாட்சி உண்மையாயிருக்கிறது; இது முகாந்தரமாக, அவர்கள் யூதருடைய கட்டுக்கதைகளுக்கும், சத்தியத்தை விட்டு விலகுகிற மனுஷருடைய கற்பனைகளுக்கும் செவிகொடாமல்,**

**தீத் 1:14. விசுவாசத்திலே ஆரோக்கியமுள்ளவர்களாகும்படி, நீ அவர்களைக் கண்டிப்பாய்க் கடிந்து கொள்.**

**தீத் 1:15. சுத்தமுள்ளவர்களுக்குச் சகலமும் சுத்தமாயிருக்கும்; அசுத்தமுள்ளவர்களுக்கும் அவிசுவாசமுள்ளவர்களுக்கும் ஒன்றும் சுத்தமாயிராது; அவர்களுடைய புத்தியும் மனச்சாட்சியும் அசுத்தமாயிருக்கும்.**

**தீத் 1:16. அவர்கள் தேவனை அறிந்திருக்கிறோமென்று அறிக்கை பண்ணுகிறார்கள், கிரியைகளினாலோ அவரை மறுதலிக்கிறார்கள்; அவர்கள் அருவருக்கப்படத்தக்கவர்களும், கீழ்ப்படியாதவர்களும், எந்த நற்கிரியையுஞ் செய்ய ஆகாதவர்களுமாயிருக்கிறார்கள்.**

கிரேத்தா தீவில் ஒரு சிலர் துர்உபதேசங்களைப் போதிக்கிறார்கள். பவுல் தீத்துவுக்கு ஆலோசனை சொல்லும் போது, அவர் ஒரு சிலரை விட்டு விலகியிருக்க வேண்டும் என்று சொல்லுகிறார். அதற்கான காரணத்தையும் தெளிவுபடுத்துகிறார். அவர்கள் மத்தியிலே கள்ளப் போதகர்களும் இருக்கிறார்கள். கள்ளப் போதகத்திற்கு செவிகொடுக்கிறவர்களும் இருக்கிறார்கள்.

கள்ளப்போதகர்கள் அடங்காதவர்களாக இருக்கிறார்கள். இருதய பெருமையினால் தலைக்கனம் பிடித்தவர்களாக அலைகிறார்கள். அவர்களுக்கு ஆவிக்குரிய காரியங்களில் விருப்பமில்லை. ஜனங்கள்மீது அதிகாரம் பண்ண வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். அவர்கள் வீண்பேச்சுக்காராகவும், மனதை மயக்குகிறவர்களாகவும் இருக்கிறார்கள் (தீத் 1:10). கள்ளப்போதகர்களில் அநேகர் விருத்தசேதனமுள்ளவர்கள். இவர்கள் நியாயப் பிரமாணத்தின் கிரியைகளினாலேயே மனுஷருக்கு இரட்சிப்பு உண்டு என்று கள்ள உபதேசம் பண்ணுகிறார்கள். இவர்கள் பாவங்களை ஆசையாய்ச் செய்கிறார்கள். பாவங்கள் மீது பிரியப்படுகிறார்கள். தாங்கள் பாவம் செய்வதுமல்லாமல் மற்றவர்களையும் பாவம் செய்ய தூண்டுகிறார்கள். துன்மார்க்கராகிய இவர்கள் ஓய்வில்லாமல் மற்றவர்களுக்குத் தீங்கு செய்கிறார்கள்.

விருத்தசேதனமுள்ளவர்கள் யூதமார்க்கத்தையும், கிறிஸ்தவ மார்க்கத்தையும் ஒன்று சேர்த்து, ஒரு புதிய மார்க்கத்தை தோற்றுவித்து உபதேசம் பண்ணுகிறார்கள். இப்படிப்பட்டவர்களை என்ன செய்ய வேண்டுமென்று பவுல் தீத்துவுக்கு கட்டளை கொடுக்கிறார். இவர்களுடைய வாயை அடக்க வேண்டும். ஆரோக்கியமான உபதேசத்தினாலே இவர்களுக்குப் புத்திசொல்ல வேண்டும். எதிர்பேசுகிற இவர்களை கண்டனம் பண்ணவேண்டும் (தீத் 1:11).

விருத்தசேதனமுள்ளவர்கள் இழிவான ஆதாயத்திற்காக தாகாதவைகளை உபதேசிக்கிறார்கள். தங்கள் கள்ள உபதேசத்தினால் முழுக்குடும்பங்களையும் கவிழ்த்துப் போடுகிறார்கள். ஆவிக்குரிய காரியம் என்னும் பெயரில் இவர்கள் இப்பிரபஞ்சத்திற்குரிய காரியத்தில் ஈடுபடுகிறார்கள். கர்த்தருக்கு ஊழியம் செய்வதற்குப் பதிலாக இவர்கள் உலகத்திற்கு ஊழியம் செய்கிறார்கள்.

கிரேத்தா தீவார் விருத்தசேதனமுள்ளவர்களின் கள்ள உபதேசத்தை வாஞ்சையாய்க் கேட்கிறார்கள். இதனால் இவர்களுடைய ஆவிக்குரிய ஜீவியம் கெட்டுப்போயிற்று. கிரேத்தா தீவாரைப்பற்றி பழங்காலத்தில் ஒரு பழமொழி வழக்கத்திலிருக்கிறது. "கிரேத்தா தீவார் ஓயாப் பொய்யர், துஷ்டமிருகங்கள், பெருவயிற்று சோம்பேறிகள்" என்பதே அந்தப் பழமொழி. இந்தப் பழமொழியை கிரேத்தா தீவாரில் ஒருவனாகிய, அவர்கள் தீர்க்க தரிசியானவனே சொல்லியிருக்கிறான் (தீத் 1:12). கிரேத்தா தீவார் தங்கள் ஜனங்களைப்பற்றி நன்றாக அறிந்து வைத்திருக்கிறார்கள். தங்கள் தீவு முழுவதும் தங்களைப்பற்றி தீமையான பழமொழி சொல்லும் வண்ணமாக அவர்களுடைய தீயசுபாவம் அமைந்திருக்கிறது.

அக்காலத்தில் கிரேத்தா தீவார் என்றாலே பொய் சொல்லுகிறவர் என்பதுதான் பொருள். அவர்கள் எப்போதுமே ஒரு வேலையும் செய்யாமல் சோம்பேறிகளாகயிருப்பார்கள். பெருந்தீனி உண்பதினால் அவர்களை பெருவயிற்று சோம்பேறிகள் என்று அக்காலத்து ஜனங்கள் அழைத்தார்கள். அவர்களுக்கு வேலை செய்வதைவிட போஜனம் பண்ணுவதில்தான் பிரியம் அதிகம். அவர்கள் நற்குணமுள்ளவர்களுமல்ல. சாந்தகுணமுள்ளவர்களுமல்ல. பிறருக்கு ஒரு நன்மையும் செய்யமாட்டார்கள். கிரேத்தா தீவார் துஷ்டமிருகங்களைப் போல இருக்கிறார்கள்.

அப்போஸ்தலர் பவுல் கிரேத்தா தீவாரைப்பற்றி, அவர்களுடைய தீர்க்கதரிசி சொன்ன பழமொழியை அங்கீகரிக்கிறார். "இந்தச் சாட்சி உண்மையாயிருக்கிறது" என்று சொல்லுகிறார். பவுல் கிரேத்தா தீவாரோடு சிறிதுகாலம் கூடயிருந்து, ஊழியம் செய்திருக்கிறார். அவர்களுடைய சுபாவங்களைப்பற்றி பவுலுக்கும் நன்றாகத் தெரியும். அவர்கள் ஓயாப்பொய்யர் என்பதும், துஷ்டமிருகங்களைப் போன்ற குணமுடையவர்கள் என்பதும், ஒரு வேலையும் செய்யாமல் சும்மாயிருக்கிற பெருவயிற்று சோம்பேறிகள் என்பதும் பவுலுக்குத் தெரியும். அவர்களுடைய தீர்க்கதரிசியும் கிரேத்தா தீவாரைப்பற்றி அப்படியே சொல்லியிருக்கிறான்.

துஷ்ட குணமுடைய கிரேத்தா தீவார் மத்தியில் எப்படி ஊழியம் செய்யவேண்டுமென்று பவுல் தீத்துவுக்குப் புத்தி சொல்லுகிறார். பவுல் தீமோத்தேயுவுக்கு நிருபம் எழுதினபோது, எபேசு சபையிலுள்ள விசுவாசிகளுக்கு சாந்தமாய்ப் புத்திசொல்லவேண்டும் என்று சொன்னார். ஆனால் இப்போது தீத்துவுக்கு எழுதும்போதோ, கிரேத்தா தீவாரை கண்டிப்பாய்க் கடிந்து கொள்ளுமாறு கட்டளை கொடுக்கிறார் (தீத் 1:14). எபேசு சபையார் மென்மையான குணமுடையவர்கள். அவர்களிடத்தில் அன்பாய்ப் பேசினாலே போதுமானது. எபேசியர்களுக்கு கடினமான வார்த்தைகள் தேவையில்லை. தீமோத்தேயு அன்போடும், மனத்தாழ்மையோடும் எபேசியருக்குப் புத்திசொன்னால் அவர்கள் புரிந்து கொண்டு மனந்திரும்புவார்கள்.

எபேசியரின் சுபாவம் வேறு. கிரேத்தா தீவாரின் சுபாவம் வேறு.கிரேத்தா தீவாரோ ஓயாப்பொய்யர். துஷ்டமிருகங்கள். துஷ்டமிருகங்களோடு சாந்தமாய்ப் பேசமுடியாது. அவைகளோடு மனத்தாழ்மையாய் நடக்க முடியாது. துஷ்டமிருகங்களிடம் கண்டிப்பாய் இருக்க வேண்டும். அவற்றை கண்டிப்பாய் நடத்த வேண்டும். அப்போதுதான் துஷ்டமிருகங்கள் நமக்குக் கீழ்ப் படியும். கிரேத்தா தீவாரும் துஷ்டமிருகங்களைப் போல முரட்டு குணமுள்ளவர்களாயிருக்கிறார்கள். அவர்கள் எந்தச் சத்தியத்திற்கும் கீழ்ப்படியாமல் கலகம் பண்ணுகிறவர்கள். இப்படிப்பட்ட முரடர்களை தீத்து கண்டிப்பாய்க் கடிந்துகொள்ளவேண்டும்.

பாவங்களில் வித்தியாசமுண்டு. ஒரு சில பாவங்கள் மிகவும் சாதாரண பாவங்களாக இருக்கும். வேறு சில பாவங்கள் துணிகரமான பாவங்களாகயிருக்கும். அதுபோலவே பாவிகளிலும் வித்தியாசமுண்டு. ஒரு சிலர் சாதாரண பாவிகளாகயிருப்பார்கள். வேறு சிலர் துணிகரமான, பயங்கரமான பாவிகளாகயிருப்பார்கள். சாதாரண பாவிகளுக்கு அன்போடு புத்தி சொன்னாலே போதும். அவர்கள் தங்கள் தப்பிதங்களை உணர்ந்து மனந்திரும்பி விடுவார்கள். ஆனால் துணிகரமாகப் பாவம் செய்கிற மோசமான பாவிகளோ எப்படி புத்தி சொன்னாலும் கீழ்ப்படியமாட்டார்கள். எதிர்த்து நிற்பார்கள். இவர்களுடைய இருதயம் கடினப் பட்டிருக்கும். இப்படிப்பட்டவர்களுக்கு அன்போடும் சாந்தத்தோடும் புத்தி சொன்னால் ஒரு பிரயோஜனமும் உண்டாகாது. இவர்களை கண்டிப்பாய்க் கடிந்துகொள்ள வேண்டும். கடினமான வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும். அப்போது தான் இவர்கள் மனந்திரும்புவதற்கு ஏதாவது ஒரு வாய்ப்பு உண்டாகும்.

கிரேத்தா தீவார் ஓயாபொய்யராகவும், துஷ்டமிருகங்களாகவும், பெருவயிற்று சோம் பேறிகளாகவும் இருந்தாலும், அவர்களும் விசுவாசத்திலே ஆரோக்கியமுள்ளவர்களாக இருக்க வேண்டும். தீத்து அதற்காகவே கிரேத்தா தீவிலே கர்த்தருடைய ஊழியத்தைச் செய்வதற்கு நியமிக்கப்பட்டிருக்கிறார். கிரேத்தா தீவாரை கடின வார்த்தைகளால், கண்டிப்பாய்க் கடிந்து கொண்டாலும், அவர்கள் மனந்திரும்பவேண்டுமென்பதே தீத்துவின் நோக்கம். அவர்கள் விசுவாசத்திலே ஆரோக்கியமுள்ளவர்களா யிருக்க வேண்டுமென்பதே தீத்துவின் விருப்பம். கடினவார்த்தைகளைப் பயன்படுத்தினாலும் அவர்களுக்கு நன்மை உண்டாகவேண்டும் என்றுதான் பவுலும், தீத்துவும் விரும்புகிறார்கள்.

ஒவ்வொரு விசுவாசியும் விசுவாசத்திலே ஆரோக்கியமுள்ளவராயிருக்க வேண்டும். இது சரீரத்தின் ஆரோக்கியமல்ல. இது ஆத்துமாவின் ஆரோக்கியம். நம்முடைய ஆத்துமா விசுவாசத்திலே ஆரோக்கியமுள்ளதாயிருக்கும்போது, அது சோர்ந்துபோகாமல் உற்சாகமாயிருக்கும். விசுவாசத்திலே ஆரோக்கியமுண்டாக வேண்டுமென்றால் கட்டுக்கதைகளுக்கு செவிகொடுக்கக் கூடாது. மேலும் சத்தியத்தைவிட்டு விலகுகிற மனுஷருடைய கற்பனைகளுக்கும் செவிகொடுக்கக்கூடாது.

கர்த்தருடைய ஆராதனையில் கட்டுக்கதைகளுக்கும் மனுஷருடைய கற்பனைகளுக்கும் இடமில்லை. கர்த்தரை நாம் ஆவியோடும் உண்மையோடும் ஆராதிக்கவேண்டும். இதுவே மெய்யான ஆராதனை. கட்டுக் கதைகளோடும் மனுஷருடைய கற்பனைகளோடும் ஆராதனை செய்வது மெய்யான ஆராதனையாகாது.

மெய்யான விசுவாசி விசுவாசத்திலே ஆரோக்கியமுள்ளவராயிருப்பார். அவருடைய இருதயம் சுத்திகரிக்கப்பட்டிருக்கும். சுத்தமுள்ளவர்களுக்கு சகலமும் சுத்தமாயிருக்கும் (தீத் 1:15). அதே வேளையில் அசுத்தமுள்ளவர்களுக்கும், அவிசுவாசமுள்ளவர்களுக்கும் ஒன்றும் சுத்தமாயிராது. சத்தியத்திலிருந்து நாம் ஜீவனைப் பெற்றுக் கொள்கிறோம். அசுத்தமுள்ளவர்களோ சத்தியத்திலிருந்து விஷத்தைத் தேடிப்பார்த்து, அதைக் கண்டுபிடித்து, அந்த விஷத்தையே பெற்றுக் கொள்கிறார்கள். இதனால் அவர்களுக்கு ஒன்றும் சுத்தமாயிருப்பதில்லை. அவர்களுடைய புத்தியும் மனச்சாட்சியும்கூட அசுத்தமாயிருக்கும்.

சத்தியம் சுத்தமாயிருக்கிறது. விசுவாசத்திலே ஆரோக்கியமுள்ளவர்கள் மாத்திரமே, சுத்தமான சத்தியத்தின் மூலமாய் சுத்திகரிக்கப்படுகிறார்கள். அசுத்த முள்ளவர்களும், அவிசுவாசமுள்ளவர்களுமோ சத்தியத்தின் மூலமாய் சுத்திகரிக்கப்படுவதில்லை. சத்தியம் சுத்தமாயிருந்தாலும் இவர்களுடைய புத்தியும் மனச்சாட்சியும் சுத்திகரிப்படுவதில்லை. இவை அசுத்தமாகவே இருக்கிறது. இவர்களுக்கு ஒன்றும் சுத்தமாயிராது. எல்லாம் அசுத்தமாகவே இருக்கும்.

கர்த்தருடைய ஊழியக்காரர்களில் அநேகர் தாங்கள் தேவனை அறிந்திருக்கிறோம் என்று அறிக்கை பண்ணுகிறார்கள். ஆனால் தங்கள் ஜீவியத்திலோ கர்த்தரை மறுதலித்து விடுகிறார்கள். தங்களுடைய வார்த்தையினால் கர்த்தரைத் துதிக்கிறார்கள். தங்கள் கிரியைகளினால் அவரை மறுதலிக்கிறார்கள். அவர்களுடைய பிரசங்கமும் அவர்களுடைய கிரியைகளும் ஒன்றுக்கொன்று முரண்பட்டிருக்கிறது. இவர்களையும் கடினமான வார்த்தைகளினால் கண்டிப்பாய்க் கடிந்து கொள்ளுமாறு பவுல் தீத்துவுக்குப் புத்திசொல்லுகிறார்.

கர்த்தரை மறுதலிக்கிற மாய்மாலக் காரர்கள் அருவருக்கப்படத்தக்கவர்கள். இவர்கள் கர்த்தருக்கும், அவருடைய சுவிசேஷத்திற்கும் கீழ்ப்படியாதவர்கள். இவர்கள் எந்த நற்கிரியையும் செய்ய ஆகாதவர்களாயிருக்கிறார்கள். தீத்து இவர்களைக் கடின வார்த்தைகளினால் கண்டிப்பாய்க் கடிந்துகொள்கிறார். தீத்து எப்படித்தான் கடிந்து கொண்டாலும், அவர்கள்தான் மனந்திரும்ப வேண்டும். அவர்களுக்குப் பதிலாக தீத்து மனந்திரும்ப முடியாது.

கிரேத்தா தீவாரில் அநேகர் அருவருக்கப்படத்தக்கவர்களாகயிருக்கிறார்கள். அருவருப்பானவர்களை விட்டு எல்லோரும் விலகிப்போய்விடுவார்கள். ஒருவரும் அவர்களுக்கு அருகாமையில் போகமாட்டார்கள். கிரேத்தா தீவாரின் நிலமை அருவருப்பானதாகயிருக்கிறது. கர்த்தரும், கர்த்தருடைய பரிசுத்தவான்களும் அருவருக்கப்படத்தக்க கிரேத்தா தீவாரை விட்டு விலகிப் போய்விடுகிறார்கள். அவர்களுடைய இஷ்டத்திற்கு அவர்களை விட்டு விடுகிறார்கள். நல்லவர்கள் அவர்களை விட்டு ஒதுங்கிப்போய்விடுகிறார்கள்.

BELLWETHER INTERNATIONAL

# தீத்து- விரிவுரை
# TITUS - COMMENTARY

GOOD NEWS PUBLISHERS

கிரேத்தா தீவாருக்கு நல்ல புத்திமதிகளைச் சொன்னாலும், அவர்கள் அவைகளைக் கேட்டு அவற்றிற்குக் கீழ்ப்படியமாட்டார்கள். அவர்கள் தங்களுக்காக ஏராளமான காரியங்களைச் செய்கிறார்கள். தங்களுடைய சந்தோஷத்திற்காக புதிது புதிதாக எதையாவது செய்கிறார்கள். ஆனால் கர்த்தருக்கோ அவர்கள் கீழ்ப்படிய மறுத்து விடுகிறார்கள். கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவைத் தங்களுடைய இரட்சகராக விசுவாசிக்க மறுத்து விடுகிறார்கள்.

கிரேத்தா தீவார் உலகப்பிரகாரமாக ஏராளமான காரியங்களைச் செய்கிறார்கள். ஆனால் கர்த்தருடைய பார்வையில் அவர்களுடைய கிரியைகளில் எதுவும் நற்கிரியையாக இல்லை. அவர்கள் எந்த நற்கிரியையும் செய்ய ஆகாதவர்களாகயிருக்கிறார்கள். இதுவே மாய்மாலக்காரரின் பரிதாபமான நிலமை.

கர்த்தருடைய ஊழியக்காரர்களாகிய நாமும் நம்முடைய ஆவிக்குரிய ஜீவியத்தில் மிகுந்த கவனமுள்ளவர்களாக இருக்க வேண்டும். "தேவனை அறிந்திருக்கிறோம்" என்று நம்முடைய வாயின் வார்த்தைகளினால் எல்லோருக்கும் அறிக்கை செய்தாலும், நம்முடைய கிரியைகளினாலும் அவரை அறிக்கை செய்வது மிகவும் அவசியமாயிருக்கிறது. வார்த்தையினால் தேவனை அறிக்கை செய்துவிட்டு, கிரியையினால் அவரை மறுதலிப்போ மென்றால், நம்முடைய நிலமையும் பரிதாபமாக முடியும். நாமும் கர்த்தருடைய சமுகத்திற்கு முன்பாக அருவருக்கப்படத்தக்கவர்களாயிருப்போம். பவுல் கிரேத்தா தீவாரைப்பற்றி சொல்லுகிற இந்த வார்த்தைகளை, நம்முடைய ஆவிக்குரிய ஜீவியத்திற்கும் எச்சரிப்பின் வார்த்தைகளாக எடுத்துக் கொள்ள வேண்டும். கர்த்தருக்கும் அவருடைய சுவிசேஷத்திற்கும் நாம் கீழ்ப்படிந்து ஜீவிக்கவேண்டும். எந்த நற்கிரியையும் செய்ய நாம் எப்போதும் தகுதியுள்ளவர்களாக இருக்கவேண்டும்.

# 2 அதிகாரம்

தன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்டிருக்கிற ஊழியத்தை தீத்து உண்மையோடு நிறைவேற்றவேண்டும் என்று பவுல் அவருக்கு ஆலோசனை சொல்லுகிறார் (தீத் 2:1). சபைகளில் முதிர்வயதுள்ள புருஷர்கள், முதிர்வயதுள்ள ஸ்திரீகள், பாலியஸ்திரீகள், பாலியபுருஷர்கள் ஆகியோர் இருக்கிறார்கள். இவர்களுக்கு எப்படியெல்லாம் புத்தி சொல்ல வேண்டுமென்று பவுல் தீத்துவுக்கு எழுதுகிறார் (தீத் 2:2-10). தேவகிருபையைப் பற்றி பவுல் விரிவாக விவரிக்கிறார். நம்மைச் சுத்திகரிக்கும்படி, நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, நமக்காக தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார் (தீத் 2:11-15). இந்தச் சத்தியத்தை தீத்து அவர்களோடு பேசி, போதித்து, சகல அதிகாரத்தோடும் கடிந்துகொள்ளவேண்டும்.

## ஆரோக்கியமான உபதேசம் தீத் 2:1

**தீத் 2:1. நீயோ ஆரோக்கியமான உபதேசத்துக்கேற்றவைகளைப் பேசு.**

தீத்து தன்னிடத்தில் ஒப்புக் கொடுக்கப்பட்டிருக்கிற ஊழியத்தை உண்மையாய் நிறைவேற்ற வேண்டும். அப்போஸ்தலர் பவுல் சுவிசேஷத்தைப் பிரசங்கம் பண்ணுவதற்கு மற்றவர்களைப் பிரதிஷ்டை பண்ணுகிறார். ஆயினும் அவரும் சுவிசேஷத்தைப் பிரசங்கம் பண்ணாமல் சும்மாயிருக்கக்கூடாது. தீத்து பட்டணந்தோறும் மூப்பர்களை நியமிக்கிறார். அவர்கள் சுவிசேஷத்தின் சத்தியத்தைப் பிரசங்கம்பண்ணுகிறார்கள். மூப்பர்கள் பிரசங்கம் பண்ணினாலும், தீத்துவும் பிரசங்கம்பண்ணவேண்டும்.

தீத்து மூப்பர்களையும் நியமிக்க வேண்டும். தானும் பிரசங்கம்பண்ண வேண்டும். கர்த்தருடைய ஊழியக்காரர்கள் மற்ற ஊழியக்காரர்களையும், மூப்பர்களையும் கவனித்துக் கொண்டிருந்தால் மாத்திரம் போதாது. அவர்கள் ஒவ்வொரு விசுவாசிக்கும் ஆவிக்குரிய போஜனம் கொடுக்க வேண்டும். அவிசுவாசிகளுக்கு கிறிஸ்துவினுடைய இரட்சிப்பின் சுவிசேஷத்தை அறிவிக்கவேண்டும்.

சுவிசேஷத்தின் மெய்யான உபதேசம் ஆரோக்கியமான உபதேசமாகயிருக்கிறது. அது நல்லஉபதேசம். பரிசுத்தமான உபதேசம். உபதேசத்தை விசுவாசிக்கிறவர்களை கிறிஸ்துவின் சுவிசேஷம் பரிசுத்தப்படுத்துகிறது. அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு எழுதும்போது, "நீயோ ஆரோக்கியமான உபதேசத்திற்கேற்றவைகளைப் பேசு" என்று கட்டளை கொடுக்கிறார்.

## முதிர்வயதுள்ள புருஷர்கள் தீத் 2:2

**தீத்2:2. முதிர்வயதுள்ள புருஷர்கள் ஜாக்கிரதையுள்ளவர்களும், நல்லொழுக்கமுள்ளவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும், விசுவாசத்திலும் அன்பிலும் பொறுமையிலும் ஆரோக்கியமுள்ளவர்களுமாயிருக்கும்படி புத்திசொல்லு.**

தீத்து ஆரோக்கியமான உபதேசத்திற் கேற்றவைகளை எல்லோரிடமும் பேச வேண்டும். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாதிரியாகப் புத்திசொல்லவேண்டும். ஊழியக்காரர்கள் எல்லா ஜனங்களுக்கும் ஒன்றுபோல பிரசங்கம்பண்ண முடியாது. பிரசங்கியார்கள் ஜனங்களுடைய குணாதிசயங்களுக்கேற்றபடி பிரசங்கிக்க வேண்டும்.

சுவிசேஷம் ஒன்றுதான். ஆனாலும் சுவிசேஷத்தை ஜனங்களுக்குப் பிரயோஜனமுண்டாகும்படி, அதற்கேற்ற பிரகாரமாக பிரசங்கம்பண்ணவேண்டும். புருஷருடைய கடமைகளை புருஷருக்குச் சொல்ல வேண்டும். ஸ்திரீகளுடைய கடமைகளை ஸ்திரீகளுக்குச் சொல்ல வேண்டும். அதுபோலவே சமுதாயத்தில் வெவ்வேறு அந்தஸ்துகளில் இருக்கிறவர்களுக்கு, அவர்களுடையஆவிக்குரிய கடமைகளைக் குறித்துப் புத்திசொல்ல வேண்டும்.

கிறிஸ்தவ விசுவாசிகளில் சிலர் முதிர்வயதுள்ள புருஷர்களாகயிருப்பார்கள். இவர்கள் கிறிஸ்துவின் உபதேசத்திற்கேற்ற பிரகாரம் ஜீவிக்கவேண்டும். தங்களுடைய வார்த்தையிலும் கிரியையிலும் கர்த்தரை மகிமைப்படுத்த வேண்டும். இவர்கள் தெளிந்த புத்தியுள்ளவர்களாக இருக்க வேண்டும். ஜாக்கிரதையுள்ளவர்களாகவும் நல்லொழுக்கமுள்ளவர்களாகவும் இருக்க வேண்டும். விசுவாசத்திலும் அன்பிலும் பொறுமையிலும் ஆரோக்கியமுள்ளவர்களாயிருக்க வேண்டும். வாலிப வயதுள்ளவர்களுக்கு முதிர்வயதுள்ள புருஷர்கள் நல்ல முன்மாதிரிகளாக ஜீவிக்கவேண்டும்.

முதிர்வயதுள்ள புருஷர்கள் நல்லொழுக்கமுள்ளவர்களாக இருக்க வேண்டும். எல்லோரிடத்திலும் நல்லொழுக்கம் தேவைப்படுகிறது. விசேஷமாக முதிர்வயதுள்ள புருஷர்களிடத்தில் இந்த சுபாவம் அதிகமாய்த் தேவைப்படுகிறது. இவர்கள் எல்லா காரியங்களிலும் ஜாக்கிரதையுள்ளவர்களாயிருக்கவேண்டும். விசுவாசத்தில் ஆரோக்கியமுள்ளவர்களாக இருக்கவேண்டும். கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தில் உண்மையுள்ளவர்களாகவும் உறுதியுள்ளவர்களாகவும் இருக்க வேண்டும்.

இவர்கள் முதிர்வயதுள்ள புருஷர்கள் வயது நிரம்பியவர்கள். இவர்களிடத்தில் கிருபையும் நன்மையும் நிரம்பியிருக்க வேண்டும். இவர்களுடைய உள்ளான மனுஷன் அதிக அதிகமாய்ப் புதுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும். இவர்களுடைய புறம்பான சரீரம் முதிர்வயதினால் மூப்பு அடைந்திருக்கலாம். ஆனாலும், உள்ளான மனுஷனோ புதுப்பிக்கப்பட்டவனாக இருக்கவேண்டும்.

முதிர்வயதுள்ள புருஷர்கள் அன்பிலும், பிறருக்கு நன்மை செய்வதிலும் ஆரோக்கியமுள்ளவர்களாயிருக்க வேண்டும். அன்பும் விசுவாசமும் நம்மிடத்தில் இணைந்து காணப்பட வேண்டும். விசுவாசம் கிரியை செய்யும்போது அன்பு வெளிப்படுகிறது. நம்முடைய அன்பு மாயமற்றதாகயிருக்க வேண்டும். கண்ணியமான அன்பு நம்மிடத்தில் காணப்பட வேண்டும். முதிர்வயதுள்ள புருஷர்கள் தேவனிடத்தில் உண்மையாய் அன்புகூர வேண்டும். கர்த்தர் நிமித்தமாய், அவர்கள் தங்களிடத்தில் அன்பு கூருவதுபோல பிறரிடத்திலும் அன்புகூரவேண்டும்.

முதிர்வயதுள்ள புருஷர்கள் பொறுமையில் ஆரோக்கியமுள்ளவர்களாயிருக்க வேண்டும். முதிர்வயதுள்ளவர்கள் பொறுமை இழப்பதற்கு அதிக வாய்ப்புள்ளது. இவர்களுக்கு அதிக அனுபவம் இருப்பதினால், அனுபவமில்லாத மற்றவர்கள் பேசுவதைக் கேட்கும்போது, எளிதில் பொறுமை இழந்து விடுவார்கள். முதிர்வயதுள்ள புருஷர்கள் பொறுமையின்மைக்கு எதிராகத் தங்களைக் காத்துக்கொள்ளவேண்டும்.

விசுவாசம், அன்பு, பொறுமை ஆகிய மூன்றும் ஒவ்வொரு விசுவாசியிடத்திலும் இருக்க வேண்டிய முக்கியமான சுபாவங்கள். இவற்றில் நாம் ஆரோக்கியமுள்ளவர்களாக இருக்கும் போது, நம்முடைய ஆவிக்குரிய ஜீவியத்திலும் ஆரோக்கியமுள்ளவர்களாகயிருப்போம். இந்த சுபாவங்கள், நம்முடைய ஆவிக்குரிய ஜீவியத்தில், நம்மை பரிபூரணத்திற்கு நேராக வழிநடத்தும்.

## முதிர்வயதுள்ள ஸ்திரீகள்
## தீத் 2:3

**தீத் 2:3. முதிர்வயதுள்ள ஸ்திரீகளும் அப்படியே பரிசுத்தத்துக்கேற்றவிதமாய் நடக்கிறவர்களும், அவதூறு பண்ணாதவர்களும், மதுபானத்துக்கு அடிமைப்படாதவர்களுமாயிருக்கவும்,**

முதிர்வயதுள்ள ஸ்திரீகளுக்கும் புத்திசொல்ல வேண்டும். அவர்களையும் எச்சரிக்க வேண்டும். முதிர்வயதுள்ள புருஷர்களிடத்தில் இருக்க வேண்டிய நற்குணங்கள் முதிர்வயதுள்ள ஸ்திரீகளிடத்திலும் காணப்பட வேண்டும். முதிர்வயதுள்ள புருஷர்களைப் போலவே, முதிர்வயதுள்ள ஸ்திரீகளும் ஜாக்கிரதையுள்ளவர்களும், நல்லொழுக்கமுள்ளவர்களும் தெளிந்த புத்தியுள்ளவர்களுமாயிருக்க வேண்டும். விசுவாசத்திலும், அன்பிலும், பொறுமையிலும் ஆரோக்கியமுள்ளவர்களாயிருக்க வேண்டும். இந்த நற்குணங்கள் முதிர்வயதுள்ள புருஷருக்கும் தேவை. முதிர்வயதுள்ள ஸ்திரீகளும் தேவை.

நம்முடைய ஆத்தும இரட்சிப்புக்கு ஒரே ஒரு வழி மாத்திரமே உண்டு. புருஷர்களுக்கு ஒரு விதமாகவும், ஸ்திரீகளுக்கு வேறுவிதமாகவும் இரட்சிப்பின் வழி நியமிக்கப்படவில்லை. இருபாலரும் ஒரே வழியில்தான் இரட்சிக்கப்படுகிறார்கள். சுவிசேஷம் ஒன்றுதான். புருஷரும் ஸ்திரீகளும் ஒரே சுவிசேஷத்தைக் கற்றுக்கொள்ளவேண்டும். ஒரே சுவிசேஷத்திற்கே கீழ்ப்படியவேண்டும். இவர்களுடைய ஆவிக்குரிய கடமைகளும் ஒன்றுதான். இவர்கள் நிறைவேற்ற வேண்டிய நீதியும் ஒன்றுதான்.

முதிர்வயதுள்ள ஸ்திரீகளும் அப்படியே பரிசுத்தத்திற்கேற்ற விதமாய் நடக்கிறவர்களாயிருக்க வேண்டும் (தீத் 2:3). பரிசுத்தமுள்ளவர்கள் பரிசுத்தமான கிரியைகளை நடப்பிக்க வேண்டும். இவர்கள் அவதூறு பண்ணக்கூடாது. தங்கள் உற்றார் உறவினர்கள் பற்றியோ, அல்லது அயலகத்தார் பற்றியோ தூஷண வார்த்தைகளைப் பேசக்கூடாது. பிறரைக் குறித்து புரணிபேசக் கூடாது. கட்டுக்கதைகளைப் பேசக்கூடாது.

பொதுவாக முதிர்வயதுள்ள ஸ்திரீகள் சும்மாயிருப்பதற்குப் பதிலாக எதையாவது பேசிக்கொண்டிருப்பார்கள். அதிலும் விசேஷமாக மற்றவர்களைக் குறித்து அவதூறாகப் பேசுவார்கள். இப்படிப்பட்ட பேச்சுக்களை முதிர்வயதுள்ள ஸ்திரீகள் தவிர்க்கவேண்டும். இவர்கள் பக்திவிருத்திக்கேதுவான காரியங்களைப் பேசலாம். அவதூறு பேசுகிறவர்கள் சிநேகிதர்களைப் பிரித்து விடுவார்கள். ஒருவருக்கொருவர் சிநேகிதராயிருக்கிறவர்களையும் பகைஞராக்கி விடுவார்கள்.

முதிர்வயதுள்ள ஸ்திரீகள் மதுபானத்திற்கு அடிமைப் படாதவர்களாயிருக்க வேண்டும். மதுபானம் பண்ணுவது எல்லா வயதினருக்கும் பாவமான காரியம். அக்காலத்தில் கிரேக்கர்கள் வயது வித்தியாசமில்லாமல் மதுபானத்திற்கு அடிமைகளாகயிருந்தார்கள். கர்த்தருடைய பிள்ளைகளிடத்தில், புறஜாதியாரும் பாவம் என்று எண்ணுகிற இந்தச் சுபாவம் காணப்படக்கூடாது.

முதிர்வயதுள்ள ஸ்திரீகள் நற்காரியங்களைப் போதிக்கிறவர்களாயிருக்க வேண்டும் (தீத் 2:5). ஸ்திரீகளுக்கு சபையில் பேச அனுமதியில்லை. அவர்கள் சபைகளில் பிரசங்கம்பண்ணக் கூடாது. ஆனாலும் அவர்கள் நற்காரியங்களைப் போதிக்காமல் சும்மாயிருக்க வேண்டிய அவசியமில்லை. தங்களுடைய ஆவிக்குரிய அனுபவங்களையும், கர்த்தர் தங்களுக்குச் செய்த நன்மைகளையும், முதிர்வயதுள்ள ஸ்திரீகள் பாலியஸ்திரீகளுக்குப் போதிக்க வேண்டும். முதிர்வயதுள்ள ஸ்திரீகளின் வார்த்தைகளும் கிரியைகளும் பரிசுத்தமாயிருக்க வேண்டும். இவர்கள் தங்கள் வார்த்தைகளினால் நற்காரியங்களைப் போதிப்பதற்குப் பதிலாக, தங்களுடைய எடுத்துக்காட்டான நல்ல ஜீவியத்தின் மூலமாய் நற்காரியங்களைப் போதிக்கவேண்டும்.

மேலும் முதிர்வயதுள்ள ஸ்திரீகள் தங்கள் வீடுகளில் பாலியஸ்திரீகளுக்கும், தங்கள் குடும்பத்தினருக்கும் ஆவிக்குரிய சத்தியங்களைப் போதிக்க வேண்டும். சுவிசேஷத்தைத் தனிப்பட்ட முறையில் இவர்கள் மற்ற ஸ்திரீகளுக்கு அறிவிக்கலாம். இவையெல்லாவற்றையும் சேர்த்து, அப்போஸ்தலர் பவுல் பொதுவாகச் சொல்லுகிறார். முதிர்வயதுள்ள ஸ்திரீகள் நற்காரியங்களைப் போதிக்கிறவர்களா யிருக்க அவர்களுக்குப் புத்திசொல்ல வேண்டுமென்று பவுல் தீத்துவுக்குக் கட்டளைகொடுக்கிறார்.

**பாலியஸ்திரீகள்**
**தீத் 2 : 4,5**

**தீத் 2:4. தேவவசனம் தூஷிக்கப்படாத படிக்கு பாலிய ஸ்திரீகள் தங்கள் புருஷரிடத்திலும், தங்கள் பிள்ளைகளிடத்திலும் அன்புள்ளவர்களும்,**

**தீத்2:5. தெளிந்த புத்தியுள்ளவர்களும், கற்புள்ளவர்களும், வீட்டில் தரித்திருக்கிறவர்களும், நல்லவர்களும், தங்கள் புருஷருக்குக் கீழ்ப்படிகிறவர்களுமாயிருக்கும் படி, அவர்களுக்குப் படிப்பிக்கத்தக்க நற் காரியங்களைப் போதிக்கிறவர்களு மாயிருக்கவும் முதிர்வயதுள்ள ஸ்திரீகளுக்குப் புத்திசொல்லு. முதிர்வயதுள்ள ஸ்திரீகள் பாலியஸ்திரீகளுக்கு புத்திசொல்ல வேண்டும். புருஷர்கள் ஸ்திரீகளைச் சந்தித்து அவர்களுக்குப் புத்தி சொல்லுவது சற்று கடினமான காரியம். நம்முடைய பண்பாடும் அதை ஒத்துக்கொள்வதில்லை. இப்படிப்பட்ட சூழ்நிலையில் முதிர்வயதுள்ள ஸ்திரீகள், பாலியஸ்திரீகளை எளிதாகச் சந்தித்து அவர்களுக்குப் புத்திசொல்ல முடியும். சில சமயங்களில் ஊழியக்காரர்கள்கூட பாலியஸ்திரீகளைச் சந்தித்து, அவர்களுக்குப் புத்திசொல்லுவது இயலாத காரியமாயிருக்கும்.**

பாலியஸ்திரீகள் தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருக்க வேண்டும். தங்களுடைய வாலிபவயதில் புத்தியை தடுமாற விட்டுவிடக் கூடாது. தேவையில்லாத காரியங்களைச் சிந்தித்து மனதைக் குழப்பக்கூடாது. சிந்தையில் தெளிவில்லாமல் இருக்கக்கூடாது.

பாலியஸ்திரீகள் கற்புள்ளவர்களாக இருக்க வேண்டும். இவர்களுடைய கற்புக்கு பலவிதமான ஆபத்துக்கள் வருவதற்கு வாய்ப்புண்டு. இவர்கள் சோதனையில் சிக்கிக்கொண்டால் தங்கள் கற்பை இழந்துவிடுவார்கள். இதனால் பாலியஸ்திரீகள் மிகவும் கவனமாய் ஜீவிக்க வேண்டும். இவர்கள் வீட்டில் தரித்திருக்க வேண்டும். வீட்டிலுள்ள குடும்பத்தாரோடு நெருங்கிய ஐக்கியத்தோடிருக்க வேண்டும்.

சில சமயங்களில் பாலியஸ்திரீகள் வெளி ஊர்களுக்குப் போகவேண்டிய சூழ்நிலைகள் வரலாம். வீட்டில் தங்கமுடியாமல், வெளியிடங்களில் தங்கி அலுவலக வேலை பார்க்கவேண்டிய சூழ்நிலைகள் உண்டாகலாம். இப்படிப்பட்ட சூழ்நிலைகளில் தங்களுடைய சிநேகிதிகளை மிகுந்த கவனத்தோடு தேர்ந்தெடுக்க வேண்டும். வாலிப வயதின் இச்சைகளுக்கு இடங்கொடுத்து பாவம் செய்துவிடக்கூடாது. தீமையை எதிர்த்து நிற்கவேண்டும். சோதனையை எதிர்த்துப் போராடவேண்டும்.

பாலியஸ்திரீகள் நல்லவர்களாகயிருக்க வேண்டும். தீயபழக்க வழக்கங்கள் எதுவும் இவர்களிடத்தில் காணப்படக் கூடாது. இவர்கள் அன்புள்ளவர்களாகவும், பிறருக்கு உதவி செய்கிறவர்களாகவும், மற்றவர்கள்மீது கரிசனையுள்ளவர்களாகவும் இருக்க வேண்டும். அன்பான வார்த்தைகளைப் பேசவேண்டும். மனத்தாழ்மையோடு மற்றவர்களிடம் பழகவேண்டும். எப்போதும் சந்தோஷமாயிருக்க வேண்டும். கசப்பான வார்த்தைகளையோ, கோபமான வார்த்தைகளையோ பேசக்கூடாது. பொறுமையோடிருக்க வேண்டும். எந்த வேலையையும் பதட்டத்தோடு செய்யக் கூடாது.

பாலியஸ்திரீகள் தங்கள் புருஷருக்கு கீழ்ப்படிகிறவர்களாக இருக்கவேண்டும். தங்கள் புருஷர்களை நேசிக்க வேண்டும். ஒருவரிடத்தில் உண்மையான அன்பு இருக்கும்போது, அவருக்கு ஆலோசனை சொல்லுவதும், கட்டளை கொடுப்பதும் மிகவும் எளிதாக இருக்கும். அன்புள்ளவர்கள் கட்டளைக்குக் கீழ்ப்படிவார்கள்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு தம்முடைய சபையின்மீது அதிகாரமுண்டு. இயேசுகிறிஸ்து தம்மை மணவாளராகவும், தம்முடைய சபையை மணவாட்டியாகவும் ஒப்புமையாகச் சொல்லுகிறார். ஒரு புருஷனுக்கு தன் மனைவியின்மீது இருக்கிற அதிகாரத்தைப் போல, இயேசுகிறிஸ்துவுக்கு தம்முடைய சபையின்மீது அதிகாரமுள்ளது.

கிறிஸ்து சபையின் தலையாகயிருக்கிறார். சபையைப் பாதுகாக்கிறார். தீமையிலிருந்து விலக்கி இரட்சிக்கிறார். சபையை பராமரிக்கிறார். எல்லாவிதமான நன்மைகளையும் கொடுக்கிறார். இயேசுகிறிஸ்து சபையைப் பாதுகாத்துப் பராமரிப்பதுபோல, புருஷன் தன் மனைவியை பாதுகாத்து பராமரிக்கவேண்டும். அவளுக்கு ஒரு தீங்கும் நேரிடாதவாறு அவளைக் காத்துக்கொள்ள வேண்டும். அவளுக்குத் தேவையான உதவிகளைச் செய்து அவளைப் பராமரிக்கவேண்டும். புருஷன் தன் மனைவியை சந்தோஷமாக வைத்திருக்கவேண்டும்.

பாலியஸ்திரீகள் தங்கள் புருஷருக்கு கீழ்ப்படிய வேண்டும் என்று சொல்லும் போது, அவர்கள் அடிமையைப்போல கீழ்ப்படிய வேண்டியதில்லை. அன்பினால் கீழ்ப்படியவேண்டும். இதுவே மெய்யான கீழ்ப்படிதல்.

பாலியஸ்திரீகள் தங்கள் பிள்ளைகளிடத்தில் அன்புள்ளவர்களாயிருக்க வேண்டும். அவர்களுக்கு இயற்கையான தாய் அன்பைக் காண்பித்தால் மாத்திரம் போதாது. அவர்கள்மீது ஆவிக்குரிய ரீதியாக அன்புகூர வேண்டும். பிள்ளைகளை எப்போதும் கொஞ்சிக் கொண்டிருக்க வேண்டும் என்னும் அவசியமில்லை. தேவை ஏற்படும்போது தாயானவள் தன் பிள்ளைகளுக்கு கண்டித்துப் புத்தி சொல்லி அவர்களைத் திருத்த வேண்டும். பிள்ளைகளுக்கு கிறிஸ்தவ உபதேசங்களைப் போதிக்க வேண்டும். கிறிஸ்துவின் அன்பை அவர்களுக்கு வெளிப்படுத்திக் காண்பிக்கவேண்டும்.

பாலியஸ்திரீகள் தங்கள் பிள்ளைகளுக்கு முன்பாக நல்ல எடுத்துக்காட்டாக ஜீவிக்கவேண்டும். பெற்றோரின் சுபாவங்களை பிள்ளைகள் கற்றுக் கொள்வார்கள். பிள்ளைகளின் சரீரங்களையும் ஆத்துமாக்களையும் பாலியஸ்திரீகள் ஆரோக்கியமாகக் காத்துக்கொள்ள வேண்டும். தங்கள் பிள்ளைகள்மீது அதிக அக்கறையும் கவனமும் செலுத்தி அவர்களை வளர்க்கவேண்டும்.

பாலியஸ்திரீகள் தேவவசனம் தூஷிக்காத படிக்கு ஜீவிக்க வேண்டும். பாலியஸ்திரீகளின் ஜீவியம் ஒழுக்கமுள்ளதாகயிருக்க வேண்டும். அவர்கள் ஒழுக்கக்கேடாக ஜீவிக்கும்போது அவர்களுடைய பெயரும் தூஷிக்கப்படும். கர்த்தருடைய நாமமும் தூஷிக்கப்படும். அவபக்தியுள்ளவர்கள் விசுவாசிகள்மீது எப்படிப்பட்ட குற்றச் சாட்டுக்களைச் சொல்லலாமென்று காத்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் நம்மைத் தூஷிக்க இடங்கொடுத்துவிடக்கூடாது.

## பாலிய புருஷர்
## தீத் 2:6

**தீத் 2:6. அப்படியே, பாலிய புருஷரும் தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருக்கவும் நீ புத்திசொல்லி,**

தீத்து பாலியபுருஷருக்கும் புத்தி சொல்ல வேண்டும். பாலியபுருஷரும் தெளிந்த புத்தியுள்ளவர்களாயிருக்க வேண்டும். வாலிபர்கள் தங்கள் வாழ்க்கையில் வேகத்தைக் காண்பிப்பார்கள். எந்தக் காரியத்தையும் அவசரப்பட்டு செய்வார்கள். சில வேலைகளை முரட்டுத்தனமாகக்கூட செய்வார்கள். அவர்களிடத்தில் பெருமையிருக்கும். பொறுமை இருக்காது. சில வாலிபர்கள் யாரையும் மதிக்கமாட்டார்கள். அப்படிப்பட்ட வாலிபர்களுக்கு தீத்து புத்தி சொல்ல வேண்டும். அவர்கள் மனத்தாழ்மையுள்ளவர்களாக இருக்க வேண்டும். அவர்களிடத்தில் பெருமை இருக்கக் கூடாது. எந்தக் காரியத்தையும் அவசரப்பட்டு செய்யாமல் பொறுமையோடும் நிதானத்தோடும் செய்ய வேண்டும்.

வாலிபருடைய ஆவிக்குரிய ஜீவியத்திற்கு பலவிதமான ஆபத்துக்கள் உள்ளன. ஏராளமான பாவங்கள் அவர்களுக்கு முன்பாக கண்ணிகளைப் போல மறைந்துள்ளன. வாலிபர்களை சிக்க வைக்கிற கண்ணிகளிலே பிரதான கண்ணி மனமேட்டிமை. பெருமையுள்ள வாலிபர்கள் யாருடைய புத்திமதியையும் கேட்கமாட்டார்கள். தங்களுக்கு எல்லாம் தெரியுமென்று இறுமாப்பாயிருப்பார்கள். முடிவில் தங்களுடைய மதியீனத்தினால் அழிந்துபோவார்கள்.

## நீயே
## தீத் 2 : 7,8

**தீத் 2:7. நீயே எல்லாவற்றிலும் உன்னை நற்கிரியைகளுக்கு மாதிரியாகக் காண்பித்து,**

**தீத் 2:8. எதிரியானவன் உங்களைக் குறித்துப் பொல்லாங்கு சொல்லுகிறதற்கு ஒன்றுமில்லாமல் வெட்கப்படத்தக்கதாக, உபதேசத்திலே விகற்பமில்லாதவனும், நல்லொழுக்க முள்ளவனும் குற்றம் பிடிக்கப் படாத ஆரோக்கியமான வசனத்தைப் பேசுகிறவனுமாயிருப்பாயாக.**

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கும் புத்திசொல்லுகிறார். அவர் எப்படி பேசவேண்டுமென்றும், எப்படி ஜீவிக்க வேண்டுமென்றும் அவருக்குக் கட்டளை கொடுக்கிறார். தீத்து மற்றவர்களுக்குப் புத்திசொன்னாலும், அவரும் தெளிந்த புத்தியுள்ளவராக ஜீவிக்க வேண்டும். அவரிடத்திலும் சாட்சியுள்ள ஜீவியம் காணப்பட வேண்டும். இல்லையென்றால் தீத்துவின் ஊழியம் ஆசீர்வாதமாயிராது. அவர் ஒரு கையினால் கட்டி, மறுகையினால் தான் கட்டியதை இடித்துப்போடுவார். நல்ல உபதேசமும், நல்ல ஜீவியமும் இணைந்து செயல்படவேண்டும்.

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்குப் புத்திசொல்லும்போது, "எல்லாவற்றிலும்" என்னும் வார்த்தையினால் ஆரம்பிக்கிறார். இந்த வார்த்தைக்கு, "எல்லாவற்றிற்கும் மேலாக" என்று பொருள் சொல்ல வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக என்று சொல்லும் போது, தீத்து எல்லோருக்கும் சொன்ன புத்திமதிகளுக்கும் மேலாக என்பது பொருள். தீத்துவின் புத்திமதியும் சுத்தமாயிருக்க வேண்டும். அவருடைய ஜீவியமும் சுத்தமாயிருக்க வேண்டும். தீத்துவின் ஜீவியம் எல்லா ஜனங்களுக்கும் முன்மாதிரியான ஜீவியமாயிருக்க வேண்டும்.

ஊழியக்காரர்கள் மந்தைக்கு முன்மாதிரிகளாகயிருக்க வேண்டும். விசுவாசிகள் இயேசு கிறிஸ்துவைப் பின்பற்றுவது போலவே ஊழியக்காரர்களையும் பின்பற்றுகிறார்கள். ஆகையினால் தீத்துவின் உபதேசமும், போதகமும், அவருடைய ஜீவியமும் பரிசுத்தமாயிருக்க வேண்டும். எல்லாவற்றிலும் தீத்து தன்னை நற்கிரியைகளுக்கு மாதிரியாகக் காண்பிக்க வேண்டும்.

தீத்து ஆரோக்கியமான வசனத்தைப் பேசவேண்டும். அவருடைய உபதேசத்தில் யாரும் குற்றம் கண்டு பிடிக்கக் கூடாது. எதிரியானவன் தீத்துவைக் குறித்து பொல்லாங்கு சொல்லுவதற்கு இடங்கொடுக்கக் கூடாது. எதிரியானவன் வெட்கப்படத்தக்கதாகப் பேசவேண்டும். உபதேசத்திலே விகற்பமில்லாதவனாய்ப் போதிக்க வேண்டும். அவர் நல்லொழுக்கமுள்ளவராய் ஜீவிக்க வேண்டும். ஆரோக்கியமான வசனங்களை தெளிவாகப் பேசவேண்டும்.

ஊழியக்காரர்கள் கர்த்தருடைய வசனத்தைப் பிரசங்கம்பண்ணும் போது, தாங்கள் கற்றுக்கொண்ட கல்வியறிவை பிரசங்கத்தில் பயன்படுத்தலாம். சாதுரிய வார்த்தைகளைப் பயன்படுத்தலாம். ஆனால் நம்முடைய உபதேசத்தில் நாம் விகற்பமில்லாதவர்களாயிருக்க வேண்டும். நம்முடைய பிரசங்கத்தை யாரும் குற்றம் சொல்லக் கூடாது. ஆரோக்கியமான வசனங்களை ஆரோக்கியமான பாஷையில் பிரசங்கம்பண்ண வேண்டும். நாம் ஆரோக்கியமான வசனத்தைப் பேசும்போது நம்முடைய பேச்சில் யாரும் குற்றம் கண்டுபிடிக்கமாட்டார்கள்.

நம்முடைய ஜீவியமும், நம்முடைய உபதேசமும் இசைந்திருக்க வேண்டும். நாம் முன்மாதிரியாக ஜீவிக்கவேண்டும். எல்லாவற்றிலும் நம்மை நற்கிரியைகளுக்கு மாதிரியாகக் காண்பிக்க வேண்டும். ஊழியக்காரர்கள் எந்தவிதமான கட்டுப்பாடுமில்லாமல் தாறுமாறாக ஜீவிக்கக் கூடாது. நாம் நன்றாகப் பிரசங்கம்பண்ணினால் மாத்திரம் போதாது. நம்முடைய ஜீவியம் சாட்சியுள்ளதாக இருக்கவேண்டும்.

எதிராளியானவன் நம்மைக் குறித்து பொல்லாங்கு சொல்லுகிறதற்கு சமயம் தேடிக்கொண்டிருக்கிறான். நம்முடைய உபதேசத்திலோ அல்லது நம்முடைய ஜீவியத்திலோ ஏதாவது குற்றம் கண்டு பிடித்தால் அவன் சும்மாயிருக்கமாட்டான். நம்மைக் குறித்து அவன் நிச்சயமாகவே பொல்லாங்கு சொல்லுவான். கர்த்தருடைய உண்மையான ஊழியக்காரர்களை சத்துருக்கள் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். நம்முடைய உபதேசத்திலோ அல்லது ஜீவியத்திலோ ஏதாவது குற்றம் கண்டுபிடிக்க வேண்டுமென்று நம்மையே கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகையினால் கர்த்தருடைய ஊழியக்காரர்களாகிய நாம் நம்மைக் குறித்து மிகவும் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். நம்முடைய வார்த்தைகளைக் குறித்தும், நம்முடைய ஜீவியத்தைக் குறித்தும் மிகுந்த கவனத்தோடிருக்க வேண்டும். எதிரியானவன் நம்மைக் குறித்து பொல்லாங்கு சொல்லுகிறதற்கு ஒன்றுமில்லாமல் வெட்கப்பட்டுப்போக வேண்டும்.

## வேலைக்காரர்
## தீத் 2 : 9,10

**தீத் 2:9. வேலைக்காரர் நம்முடைய இரட்சகராகிய தேவனுடைய உபதேசத்தை எல்லாவற்றிலும் அலங்கரிக்கத்தக்கதாக,**

**தீத் 2:10. தங்கள் எஜமான்களுக்குக் கீழ்ப்படிந்திருந்து எதிர்த்துப்பேசாமல், எல்லாவற்றிலும் பிரியமுண்டாக நடந்து கொள்ளவும், திருடாமலிருந்து, சகலவிதத்திலும் நல்லுண்மையைக் காண்பிக்கவும் புத்தி சொல்லு.**

வேலைக்காரர் தங்கள் எஜமான்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளை அறிந்திருக்கவேண்டும். தாங்கள் செய்ய வேண்டிய கடமைகளை நேர்த்தியாய்ச் செய்ய வேண்டும். வேலைக்காரர் உலகப்பிரகாரமான எஜமான்களுக்கு ஊழியம் செய்தாலும், எல்லோருக்கும் எஜமானானவர் பரலோகத்திலிருக்கிறார் என்பதை நினைவுகூர வேண்டும்.

கீழ்ப்படிதல் வேலைக்காரரிடத்தில் இருக்கவேண்டிய முக்கியமான குணம். வேலைக்காரர் எல்லா வேலைகளையும் கீழ்ப்படிதலோடு செய்யவேண்டும். தங்கள் எஜமான்களுக்கு கீழ்ப்படிந்திருந்து எதிர்த்துப் பேசாமல் நடந்துகொள்ள வேண்டும். வேலைக்காரரின் சித்தமானது எஜமானுடைய சித்தத்திற்கு கட்டுப்பட்டிருக்கிறது. வேலைக்காரரின் நேரமும், அவர்களுடைய உழைப்பும் எஜமான்களுடைய கட்டளையின் பிரகாரம் நடைபெற வேண்டும். ஒவ்வொரு வேலைக்காரரும் தங்கள் எஜமான் சொல்லுகிற வேலையை கீழ்ப்படிதலோடு நிறைவேற்றவேண்டும்.

வேலைக்காரர் தங்கள் எஜமான்களுக்கு எல்லாவற்றிலும் பிரியமுண்டாக நடந்து கொள்ள வேண்டும். "பிரியமுண்டாக நடந்துகொள்வது" என்னும் வார்த்தைக்கு "கீழ்ப்படிவது" என்று வேதபண்டிதர்கள் பொருள் சொல்லுகிறார்கள். ஏனெனில் கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம், நம்முடைய எஜமான்களுக்கு எல்லாவற்றிலும் பிரியமுண்டாக நடந்து கொள்வது இயலாத காரியம்.

எஜமானுடைய பிரியமும் கர்த்தருடைய பிரியமும் ஒத்துப்போகும் போது, வேலைக்காரர் தன் எஜமானுக்கு எல்லாவற்றிலும் எவ்வித சிரமமுமில்லாமல் பிரியமுண்டாக நடந்து கொள்வார். ஆனால் எஜமானுடைய பிரியம் கர்த்தருடைய விருப்பத்திற்கு விரோதமாகயிருக்கும்போது, வேலைக்காரர் எஜமானுக்கு கீழ்ப்படியாமல் கர்த்தருடைய சித்தத்திற்கே கீழ்ப்படிய வேண்டும். எஜமானுடைய கட்டளையும் கர்த்தருடைய கட்டளையும் முரண்படும்போது, நாம் மனுஷருக்குக் கீழ்ப்படியாமல் கர்த்தருக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்பதே கிறிஸ்துவின் உபதேசம். வேலைக்காரரின் கீழ்ப்படிதலுக்கு தேவனுடைய சித்தமே ஆதாரமாகயிருக்கிறது. தேவன் விரும்புகிறதினால்தான் வேலைக்காரரும் தங்கள் எஜமான்களுக்குக் கீழ்ப்படிகிறார்கள்.

வேலைக்காரர் தங்கள் எஜமான்களுக்கு மதிப்பு கொடுக்க வேண்டும். அவருடைய அதிகாரத்திற்குக் கீழ்ப்படிந்து தங்களுக்குக் கொடுக்கப்பட்ட வேலைகளை நேர்த்தியாய்ச் செய்து முடிக்கவேண்டும். நாம் உண்மையாய் வேலைசெய்வதைப் பார்த்து நம்முடைய எஜமான் நம்மைக் குறித்து சந்தோஷப்பட வேண்டும். கிறிஸ்துவில் நமக்கு விடுதலை உண்டு. ஆனாலும் ஒரு எஜமானுக்குக் கீழ் நாம் வேலைசெய்யும்போது, அவருடைய கட்டளைக்கு நாம் கீழ்ப்பட்டவர்களாகயிருக்கிறோம். நாம் கிறிஸ்துவை நேசிப்பதினால், நமக்கு மேலான அதிகாரங்களுக்கு கீழ்ப்படிய வேண்டும்.

நம்முடைய உலகப்பிரகாரமான எஜமான்கள் மனுஷராகயிருக்கிறார்கள். மனுஷர் மனுஷருக்கு வேலை செய்கிறார்கள். கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம் மனுஷருக்கு வேலை செய்தாலும் கர்த்தருடைய வேலைக்காரராகவும் இருக்கிறோம். நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவே நமக்கு மெய்யான எஜமான்.

இப்பிரபஞ்சத்தில் தேவனே எஜமான்களையும், வேலைக்காரரையும் நியமித்திருக்கிறார். தங்கள் எஜமான்களுக்கு வேலை செய்ய வேண்டியதிருக்கிறதே என்று வேலைக்காரர் வருத்தப்படக் கூடாது. தங்களுக்குக் கொடுக்கப்பட்ட வேலையை உண்மையோடும் சந்தோஷத்தோடும் செய்ய வேண்டும். கர்த்தர் நம்மை எந்த நிலைமையில் வைத்திருக்கிறாரோ அந்த நிலைமையில் நாம் கர்த்தருக்கு உண்மையுள்ளவர்களாயிருக்க வேண்டும். நாம் இருக்கிற சூழ்நிலையில், நாம் நம்முடைய எஜமான்களுக்கு எல்லாவற்றிலும் பிரியமுண்டாக நடந்து கொள்ளவேண்டும். நடைமுறையில் இது கடினமான உபதேசம் தான். ஆனாலும் இந்த உபதேசத்தை நமது இருதயத்தில் பதியவைத்து, கர்த்தருடைய வார்த்தைக்கு முக்கியம் கொடுத்து, நாம் வேலை செய்யவேண்டும்.

வேலைக்காரர் தங்கள் எஜமான்களுக்கு எதிர்த்துப் பேசக்கூடாது. சில சமயங்களில் எஜமான்கள் வேலைக்காரரை கோபத்தோடு பேசிவிடுவார். இதனால் வேலைக்காரரின் கோபமும் அதிகரிக்கும். எஜமான் நீதியாகப் பேசவில்லை என்று வேலைக்காரர் அவர்மீது கோபப்படுவார். இப்படிப்பட்ட சூழ்நிலையிலும் வேலைக்காரர் தன் நாவை அடக்க வேண்டும். எஜமான்களுக்குக் கீழ்ப்படிந்திருக்க வேண்டும். அவர்களுக்கு எதிர்த்துப் பேசக்கூடாது.

எஜமான் கோபத்தோடு பேசும்போது வேலைக்காரர் முடிந்த வரையிலும் மௌனமாக இருக்கவேண்டும். சிலர் கோபத்தை அடக்கிக் கொள்வார்கள். கோபத்தை வார்த்தையினால் வெளிப்படுத்தமாட்டார்கள். ஆனாலும் அவர்களுக்குள் கோபம் பற்றியெறியும். கோபத்தை அடக்கமுடியவில்லையென்றால் வார்த்தைகள் வெடித்து சிதறிவிடும். கர்த்தருடைய பிள்ளைகளாகிய நம்மிடத்தில் எதிர்த்துப் பேசுகிற சுபாவமோ, அடங்காத சுபாவமோ இருக்கக்கூடாது.

நம்முடைய எஜமான்களுக்கு கோபத்தோடு எதிர்த்துப் பேசாமல், மென்மையாகப் பிரதியுத்தரம் சொல்ல வேண்டும். ஏற்ற சூழ்நிலை வரும்போது நம்முடைய நியாயத்தையும் நிலமையையும் எஜமான்களிடம் பக்குவமாகச் சொல்லலாம். எஜமான் கட்டளை கொடுத்தவுடன் அவருக்கு எதிர்த்துப் பேசுவது வேலைக்காரருக்கு நல்ல சுபாவமல்ல. எஜமான் நல்லவராகயிருந்தால், அவர் ஞானமுள்ளவராகயிருந்தால் தன்னுடைய வேலைக்காரர் சொல்லுகிற கருத்தையும் செவிகொடுத்து கேட்பார். வேலைக்காரர் சொல்லுவது சரியாக இருக்கும்போது அதை அங்கீகரிப்பார்.

வேலைக்காரர் திருடக் கூடாது. சகலவிதத்திலும் நல்உண்மையைக் காண்பிக்க வேண்டும். நல்ல வேலைக்காரர் உண்மையுள்ளவராகவும், கண்ணியமுள்ளராகவும் இருக்கவேண்டும். வேலைக்காரர் எஜமான்களுக்கு வேலை செய்தாலும், அந்த வேலையைத் தங்களுக்குச் செய்வது போல பாவித்து உண்மையாய் வேலை செய்யவேண்டும். வேலையில் நீதியும் உண்மையும் இல்லையென்றால் அவரால் உண்மையுள்ள வேலைக்காரராயிருக்க முடியாது.

சில சமயங்களில் எஜமான்கள் கடினகுணமுள்ளவராகவும், அதிகமாய் வேலை வாங்குகிறவராயும், குறைவாய் சம்பளம் கொடுக்கிறவராயும் இருப்பார். வேலைக்காரருக்கு உழைப்புக்குத் தகுந்த ஊதியம் கொடுக்கமாட்டார். இப்படிப்பட்ட சூழ்நிலையில்கூட வேலைக்காரர் தங்களுடைய தேவைகளை நிறைவேற்ற திருடக்கூடாது. திடுவதை நியாயப்படுத்தக் கூடாது. எஜமானுடைய பொருளை திருடக்கூடாது. அவருடைய பொருளுக்கு சேதமுண்டாக்கக்கூடாது. இது மாத்திரம் போதாது. எஜமானுக்கு லாபமுண்டாக வேலைக்காரர் பிரயாசப்பட வேண்டும். எல்லாவிதத்திலும் எஜமானுக்கு உண்மையுள்ளவராய் ஊழியம் செய்து அவருக்கு அதிக லாபம் கிடைக்க பிரயாசப்படவேண்டும்.

எஜமானுக்கு உண்மையாய் வேலை செய்யாமல், அவர் தங்களுக்கு சரியாக சம்பளம் கொடுக்கவில்லையென்று குற்றம் சொல்லக்கூடாது. நம்முடைய வேலையின் மூலமாய் எஜமானுக்கு நல்ல லாபம் வந்தால்தான் அவர் நமக்கு சந்தோஷமாய் சம்பளம் கொடுப்பார். சம்பளத்தை உயர்த்திக் கொடுப்பார். எஜமான் கொடுக்கும் வரையிலும் காத்திருக்க வேண்டும். அவசரப்பட்டு, ஆசைப்பட்டு எஜமானுடைய சொத்துக்களைத் திருடிவிடக் கூடாது.

இரட்சராகிய தேவனுடைய உபதேசத்தை வேலைக்காரர் எல்லாவற்றிலும் அலங்கரிக்க வேண்டும். வேலைக்காரர் தங்களுடைய கடமைகளை கவனமாகவும் நேர்த்தியாகவும் செய்யும் போது தேவனுடைய நாமம் மகிமைப்படும். அவருடைய உபதேசம் அலங்கரிப்படும். எஜமான்கள் அவிசுவாசிகளாகயிருந்தாலும், வேலைக் காரர் உண்மையுள்ளவர்களாக வேலை செய்யும்போது, அவர்களுடைய நற்குணம் எஜமான்களுடைய இருதயத்தைத் தொடும். அவிசுவாசிகளைவிட விசுவாசிகளாகயிருக்கிற வேலைக்காரரே நல்ல வேலைக்காரர் என்று எஜமான் தீர்மானம்பண்ணுவார்.

கர்த்தருடைய பிள்ளைகள் கர்த்தரைக் கனம்பண்ணுவது போல, தாங்கள் செய்கிற தொழிலையும் கனம்பண்ண வேண்டும். தங்கள் தொழிலுக்கு உண்மையுள்ளவர்களாக நடந்துகொள்ள வேண்டும். தங்களுடைய கீழ்ப்படியாமையின் மூலமாகவோ, எதிர்த்துப் பேசுவது மூலமாகவோ, திருடுவது மூலமாகவோ கர்த்தருடைய பிள்ளைகள் தாங்கள் செய்கிற தொழிலுக்கு அவப்பெயர் உண்டாக்கிவிடக் கூடாது. இதனால் தேவனுடைய நாமமும் தூஷிக்கப்படும். அவருடைய உபதேசமும் தூஷிக்கப்படும்.

## தேவகிருபை
## தீத் 2 : 11-13

**தீத் 2:11. ஏனெனில் எல்லா மனுஷருக்கும் இரட்சிப்பை அளிக்கத்தக்க தேவகிருபையானது பிரசன்னமாகி,**

**தீத் 2:12. நாம் அவபக்தியையும் லௌகிக இச்சைகளையும் வெறுத்து, தெளிந்த புத்தியும் நீதியும் தேவபக்தியும் உள்ளவர்களாய் இவ்வுலகத்திலே ஜீவனம்பண்ணி,**

**தீத் 2:13. நாம் நம்பியிருக்கிற ஆனந்த பாக்கியத்துக்கும், மகா தேவனும் நமது இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவினுடைய மகிமையின் பிரசன்னமாகுதலுக்கும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்படி நமக்குப் போதிக்கிறது.**

அப்போஸ்தலர் பவுல் சுவிசேஷத்தின் திட்டத்தை இங்கு விவரிக்கிறார். ஒவ்வொன்றும் அதற்கு நியமிக்கப்பட்டிருக்கிற கடமையை நேர்த்தியாய்ச் செய்யவேண்டும். இதுவே கிறிஸ்தவ உபதேசத்தின் சாரம். சுவிசேஷத்தின் உபதேசங்களை மனுஷருக்குப் போதிக்க வேண்டும். மனுஷர் சுவிசேஷத்தின் உபதேசத்தைக் கேட்டு, அதற்குக் கீழ்ப்படிந்து நல்நடத்தையுள்ளவர்களாக மாறவேண்டும்.

இது தேவனுடைய கிருபையின் காலம். இக்காலத்தில்தான் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகிறது. சுவிசேஷத்தினால் நன்மை உண்டாகிறது. நாம் கிருபையைப் பெற்றுக் கொண்டு, நன்மை செய்ய வில்லையென்றால், நாம் விருதாவாய் கிருபையைப் பெற்றிருக்கிறோம்.

தேவகிருபை எல்லா மனுஷருக்கும் இரட்சிப்பை அளிக்கிறது. ஆகையினால் சுவிசேஷமானது "ஜீவ வார்த்தை" என்று அழைக்கப்படுகிறது. சுவிசேஷத்தினால் நமக்கு விசுவாசமும், ஜீவனும் உண்டாகிறது.

சுவிசேஷம் பிரன்னமாயிருக்கிறது. சுவிசேஷத்திற்கு முந்திய பழைய காலம் வெளிச்சமில்லாத இருட்டான காலம். அது நிழலுக்கு ஒப்பான காலம். சுவிசேஷத்தின் காலமோ தெளிவாகவும் வெளிச்சமாகவும் இருக்கிறது. சுவிசேஷம் பிரகாசிக்கிற ஒளியாயிருக்கிறது.

சுவிசேஷம் எல்லா மனுஷருக்கும் பிரசன்னமாகியிருக்கிறது. சுவிசேஷத்தின் கிருபை எல்லோருக்கும் பொதுவானது. சுவிசேஷத்தின் ஆசீர்வாதத்தில் பங்குபெற எல்லா மனுஷரும் அழைக்கப்படுகிறார்கள். கிருபையின் உபதேசமும், இரட்சிப்பின் உபதேசமும் எல்லா மனுஷருக்கும் பொதுவானது. சுவிசேஷத்தின் மூலமாய் வருகிற இரட்சிப்பு எல்லா சூழ்நிலைகளிலுமுள்ள மனுஷருக்கும் பொதுவானது. சமுதாயத்தின் எல்லா அந்தஸ்துக்களிலிருக்கிறவர்களும் சுவிசேஷத்தின் கிருபையைப் பெற்றுக் கொள்ளலாம். அவர்களுக்கும் தேவகிருபை பிரசன்னமாகியிருக்கிறது. அடிமைகளும், வேலைக்காரரும், எஜமான்களும் தேவகிருபையினாலே இரட்சிப்பைப் பெற்றுக் கொள்ளலாம்.

நமக்குப் போதிக்கும் படியாக சுவிசேஷம் கொடுக்கப்பட்டிருக்கிறது. நாம் எதைப் பின்பற்றக்கூடாது என்றும், எதைப் பின்பற்றவேண்டும் என்றும் சுவிசேஷம் நமக்குப் போதிக்கிறது. மேலும் நாம் எதைச் செய்யவேண்டுமென்றும், எதைப் பற்றிக்கொள்ளவேண்டுமென்றும், எதை விட்டு விலகவேண்டுமென்றும், எதைத் தவிர்க்க வேண்டுமென்றும் சுவிசேஷம் நமக்கு உபதேசம் பண்ணுகிறது. விவாதம் பண்ணுவதற்காகவோ, தர்க்கம் பண்ணுவதற்காகவோ சுவிசேஷம் நமக்குக் கொடுக்கப்படவில்லை. சுவிசேஷத்தின் சத்தியத்தை நம்முடைய இருதயத்தில் ஏற்றுக்கொண்டு, அதற்குக் கீழ்ப்படிந்து, நம்முடைய ஜீவியத்தைப் பரிசுத்தத்திற்கு நேராக ஒழுங்குபடுத்த வேண்டும். இதற்காகவும் சுவிசேஷம் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம் அவபக்தியையும் லௌகிக இச்சைகளையும் வெறுக்க வேண்டும். தேவனுடைய ஆள்தத்துவத்தை நாம் விசுவாசிக்க வேண்டும். தேவனை விசுவாசிக்காத எல்லா அவிசுவாசங்களையும் நம்மைவிட்டு நீக்கிப்போட வேண்டும். தேவனை ஆராதிக்காத எல்லா அவபக்திகளையும் நம்மை விட்டு அகற்றவேண்டும். தேவனை எப்படி நேசிக்கவேண்டுமோ அப்படி நேசிக்கவேண்டும். தேவனுக்கு எப்படி பயப்படவேண்டுமோ அப்படியே நாம் பயப்படவேண்டும். தேவனை எப்படி சார்ந்திருக்கவேண்டுமோ அப்படியே நாம் அவரைச் சார்ந்திருக்க வேண்டும். அவருக்கு எப்படி கீழ்ப்படியவேண்டுமோ அப்படியே நாம் அவருக்கு கீழ்ப்படிய வேண்டும்.

நாம் லௌகிக இச்சைகளை வெறுக்க வேண்டும். உலகப்பிரகார மனுஷரிடத்தில் காணப்படுகிற லௌகிக இச்சைகள் கர்த்தருடைய பிள்ளைகளிடத்தில் காணப்படக் கூடாது. உலகசிநேகம் தேவனுக்கு விரோதமான பகை. நாம் கர்த்தரிடத்தில் நம்பிக்கை வைப்பதற்குப் பதிலாக லௌகிக காரியங்களில் நம்பிக்கை வைக்கக்கூடாது. லௌகிக இச்சையுள்ளவர்கள் பரலோக அழைப்பை இழந்து போவார்கள். இவர்கள் பரலோகத்தில் பிரவேசிப்பதற்கு தகுதியற்றவர்களாகிவிடுவார்கள்.

கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம் இவ்வுலகத்திலே, தெளிந்த புத்தியும், நீதியும், தேவபக்தியும் உள்ளவர்களாய் ஜீவனம்பண்ணவேண்டும். கிறிஸ்துவின் உபதேசம் "எதைச் செய்யக்கூடாது" என்று சொல்லி, தன்னுடைய உபதேசத்தை முடித்துக் கொள்வதில்லை. "எதைச் செய்யக்கூடாது" என்று சொல்வதோடு, "எதைச் செய்யவேண்டும்" என்றும் சுவிசேஷம் நமக்குக் கட்டளை கொடுக்கிறது. நாம் தீமையைவிட்டு விலகவேண்டும். அதே வேளையில் நாம் நன்மையைப் பற்றிக்கொள்ளவும் வேண்டும்.

கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம் தெளிந்த புத்தியுள்ளவர்களாய் ஜீவிக்கவேண்டும். கர்த்தர் நமக்குக் கொடுத்திருக்கிற ஆசீர்வாதங்களை அவருடைய கிருபையினால் அனுபவிக்கவேண்டும். நம்மைப் பொறுத்தளவில் நமக்குள் குழப்பம் எதுவும் இருக்கக்கூடாது. நாம் விலக்கிவிடவேண்டுமென்று கர்த்தர் நமக்கு கட்டளையிடுகிற காரியங்களை கட்டாயம் விலக்கிவிடவேண்டும். எல்லா மனுஷரோடும் நீதியாய்ப் பழகவேண்டும்.

ஒவ்வொருவருக்கும் செலுத்த வேண்டிய மரியாதைகளை நாம் குறைவில்லாமல் செலுத்த வேண்டும். ஒவ்வொருவருக்கும் காண்பிக்க வேண்டிய நீதியை பட்சபாதமில்லாமல் காண்பிக்க வேண்டும். யாருக்கும் தீங்கு செய்யக்கூடாது. அதேவேளையில் நாம் பிறருக்கு நன்மை செய்யவும் வேண்டும்.

சுயஆசை அநீதியின் சாயலாயிருக்கிறது. சுயஆசையுடையவர்கள் மற்றவர்களுடைய காரியங்களைக் கொள்ளையிடுகிறார்கள். பிறருக்குரியவைகளை தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொள்கிறார்கள். கர்த்தருடைய பிள்ளைகள் பிறருடைய பொருள்களை இச்சிக்கக்கூடாது. நாம் தெளிந்த புத்தியுள்ளவர்களாக ஜீவிக்க வேண்டுமென்றால் நீதியுள்ளவர்களாக ஜீவிக்க வேண்டும்.

தேவனிடத்தில் நாம் தேவபக்தியுள்ளவர்களாய் ஜீவனம்பண்ண வேண்டும். நம்முடைய ஜீவியத்தின் எல்லா அம்சங்களிலும் தேவனுக்கு கனமும் துதியும் மகிமையும் செலுத்த வேண்டும். தேவனுக்குச் செலுத்த வேண்டிய கடமைகளை நாம் பயபக்தியோடு நிறைவேற்ற வேண்டும். கர்த்தரை விசுவாசிப்பது, தேவன் இருக்கிறார் என்று நம்புவது, நம்முடைய ஜீவியத்தில் பரிசுத்தமடைவது ஆகியவை தேவனுடைய சமுகத்தில் நாம் நிறைவேற்றவேண்டிய கடமைகள்.

தேவனை நேசிப்பது, தேவபக்தியோடிருப்பது, தேவனிடத்தில் விசுவாசம் வைப்பது, தேவனை சார்ந்திருப்பது ஆகியவையெல்லாம் நம்முடைய ஜீவியத்தில் காணப்பட வேண்டிய நல்ல சுபாவங்கள். நம்மை கர்த்தருடைய சமுகத்தில் ஜீவபலியாக அர்ப்பணிக்க வேண்டும். கர்த்தரிடத்தில் ஜெபிக்க வேண்டும். அவரைத் துதிக்க வேண்டும். அவருடைய வார்த்தைகளைத் தியானிக்க வேண்டும். அவர் செய்த அற்புதங்களையும் தியானிக்க வேண்டும்.

இதுவே தேவபக்தி. நாம் விசுவாசத்தோடு தேவனை நோக்கிப் பார்க்கவேண்டும். நம்பிக்கையோடு அவருடைய சமுகத்தில் வரவேண்டும். நம்முடைய தேவன் தாமே தம்மை கிறிஸ்துவில் வெளிப்படுத்தியிருக்கிறார்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவிடத்தில் நாம் தேவபக்தியுள்ளவர்களாய் ஜீவிக்க வேண்டும். தேவபக்தியில்லாதவர்களால் கர்த்தரை உண்மையோடு துதிக்க முடியாது. தேவபக்தியில்லாதவர்கள் சுவிசேஷத்தின் சத்தியத்தை விசுவாசிக்கமாட்டார்கள். சுவிசேஷத்தை ஏற்றுக்கொண்டு அதற்குக் கீழ்ப்படிந்து ஜீவிக்கமாட்டார்கள்.

நாம் எப்படி விசுவாசிக்க வேண்டுமென்றும், நம்முடைய நம்பிக்கை எப்படியிருக்க வேண்டுமென்றும் சுவிசேஷம் நமக்குப் போதிக்கிறது. அதே வேளையில் நாம் எப்படி பரிசுத்தமாய் ஜீவிக்கவேண்டுமென்றும் சுவிசேஷம் நமக்குத் தெளிவாய்ப் போதிக்கிறது. இப்பிரபஞ்சத்திற்குரிய காரியங்களை நாம் கர்த்தரிடத்தில் விசுவாசம் வைத்து பெற்றுக் கொள்கிறோம். அதேவேளையில் பரலோகத்திலும் மேன்மையான காரியங்களைப் பெற்றுக்கொள்வோமென்று நம்பிக்கையோடே எதிர்பார்க்கிறோம்.

நாம் ஆனந்த பாக்கியத்தை நம்பியிருக்கிறோம். இயேசு கிறிஸ்துவினுடைய வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். கர்த்தருடைய பிள்ளைகளாகிய நம்முடைய ஜீவியத்திற்கு விசுவாசமே ஆதாரம். இந்த விசுவாசத்தின் மூலமாய் கர்த்தர் நமக்கு வாக்குப் பண்ணியிருக்கிற ஆசீர்வாதங்களை நம்பிக்கையோடு நோக்கிப்பார்க்கிறோம். கர்த்தர் நமக்கு நித்திய ஜீவனையும், பரலோக ஜீவனையும் வாக்குப் பண்ணியிருக்கிறார். நாம் பரலோகத்தை எதிர்பார்ப்பதை பவுல் நம்பிக்கையென்று சொல்லுகிறார். இதை ஆனந்த பாக்கியம் என்றும் அழைக்கிறார்.

நாம் இப்பிரபஞ்சத்தில் ஏராளமான காரியங்களுக்காக கர்த்தரிடத்தில் நம்பிக்கை வைத்திருக்கிறோம். நம்முடைய நம்பிக்கையெல்லாவற்றிலும், நாம் பரலோகத்தைப்பற்றி நம்புவதே, நம்முடைய பிரதான நம்பிக்கை. இதுவே நம்முடைய ஆனந்த பாக்கிய நம்பிக்கை. நம்முடைய நம்பிக்கையின்படி நாம் பரலோக ஜீவனைப் பெற்றுக் கொள்ளும்போது, நமக்கு நித்திய சந்தோஷம் உண்டாயிருக்கும். நித்திய சந்தோஷமே நமக்கு ஆனந்த பாக்கியம்.

நம்முடைய ஆனந்த பாக்கிய நம்பிக்கை எப்போது நமக்குச் சித்திக்கும் என்று பவுல் தெளிவுபடுத்துகிறார். நம்முடைய தேவன் மகா தேவனாகவும், நமது இரட்சகராகவும் இருக்கிறார். அவரே நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து. அவருடைய மகிமையின் பிரசன்னமாகுதலை நாம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். கிறிஸ்துவே மகாதேவன். இது கற்பனையாகச் சொல்லப்படுகிற வார்த்தையல்ல. மெய்யாகவே கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மெய்யான தேவனாகவும், மகாதேவனாகவும், இரட்சகராகவும் இருக்கிறார்.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய மகிமையின் பிரசன்னமாகுதல் சீக்கிரத்தில் உண்டாகும். கிறிஸ்துவின் இரண்டாம் வருகை சீக்கிரம் வரும். அவருடைய வருகையின் போது, அவருடைய ஊழியக்காரர்களுக்கு வெகுமதி கொடுக்கப்படும். கர்த்தருடைய பரிசுத்தவான்கள் அவரோடுகூட மகிமையில் பிரவேசிப்பார்கள்.

பரலோக ராஜ்யத்தில் எல்லா விசுவாசிகளுக்கும் பொதுவான ஆசீர்வாதம் வாக்குப்பண்ணப்பட்டிருக்கிறது. அந்த ஆசீர்வாதம் நமக்கு ஆனந்த பாக்கியமாயிருக்கும். கிறிஸ்துவே நம்முடைய நம்பிக்கையாயிருக்கிறார். நாம் அவரையே நோக்கிப் பார்க்கிறோம். நம்முடைய ஆசீர்வாதங்களெல்லாம் நமக்கு கிறிஸ்துவுக்குள் இருக்கிறது. அவை கிறிஸ்து மூலமாய் நமக்கு வருகிறது. ஆகையினால்தான் அப்போஸ்தலர் பவுல் இயேசுகிறிஸ்துவை "நாம் நம்பியிருக்கிற ஆனந்த பாக்கியம்" என்று அழைக்கிறார்.

நமக்கு ஆனந்த பாக்கியம் வாக்குப்பண்ணப்பட்டிருப்பதினால் நாம் பரிசுத்தமாய் ஜீவிக்க வேண்டும். கிறிஸ்துவின் சுவிசேஷம் நம்மை பரிசுத்தத்தின் பாதைக்கு நேராக வழிநடத்துகிறது. நாம் பரிசுத்த மடைவதற்கு, அவபக்தியையும் லௌகிக இச்சைகளையும் வெறுக்க வேண்டும். தெளிந்த புத்தியும் நீதியும் தேவபக்தியும் உள்ளவர்களாய் இவ்வுலகத்திலே ஜீவனம்பண்ண வேண்டும். கர்த்தர் தம்முடைய பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும், அவர்கள் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புக்களைக் கொடுத்திருக்கிறார். ஒவ்வொரு விசுவாசியும் தன்னுடைய கடமையைச் செய்ய வேண்டும். கர்த்தருக்கு நன்றியுள்ளவர்களாக இருக்கவேண்டும்.

இயேசுகிறிஸ்து தம்முடைய மகிமையில் பிரசன்னமாகும் போது, அவருடைய பரிசுத்தவான்களெல்லோரும் ஆனந்த பாக்கியத்தைப் பெற்றுக் கொள்வார்கள். மகாதேவனுடைய மகிமையில், நம்முடைய இரட்சகராகிய இயேசுகிறிஸ்துவினுடைய மகிமை சூரிய ஒளியைப் போல பிரகாசமாகயிருக்கும். இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையை நாம் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். கிறிஸ்துவின் சுவிசேஷம் இப்படிப்பட்ட பயபக்தியான எதிர்பார்ப்புக்கு நம்மைத் தகுதிப்படுத்துகிறது. அந்த ஆனந்த பாக்கியத்தை நாம் நம்பிக்கையோடு எதிர்பார்க்கவேண்டும்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மகாதேவனாகயிருக்கிறார். அவர் மறுபடியும் வருவரென்பது அவருடைய பிள்ளைகளெல்லோருக்கும் சந்தோஷமான நற்செய்தி. கர்த்தருடைய வருகையைப்பற்றிய செய்தி அவருடைய பிள்ளைகளுக்கு ஆறுதலைக்கொடுக்கிறது.

**நமக்காக தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்தார் தீத் 2:14**

**தீத் 2:14. அவர் நம்மைச் சகல அக்கிரமங்களினின்று மீட்டுக்கொண்டு, தமக்குரிய சொந்த ஜனங்களாகவும், நற்கிரியைகளைச் செய்ய பக்திவைராக்கியமுள்ளவர்களாகவும் நம்மைச் சுத்திகரிக்கும்படி, நமக்காகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்தார்.**

கிறிஸ்துவின் மரணத்தினால் நமக்கு ஆவிக்குரிய ஆசீர்வாதம் கிடைத்திருக்கிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவானவர் நம்மை சுத்திகரிக்கும்படியாக, நமக்காக தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார். கிறிஸ்துவினுடைய மரணத்தின் மூலமாய் நமக்கு நித்திய சந்தோஷம் கிடைத்திருக்கிறது. அவருடைய மரணத்தினால் நாம் நற்கிரியைகளைச் செய்ய பக்திவைராக்கியமுள்ளவர்களா யிருக்கிறோம்.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து, மகாதேவனும் நம்முடைய இரட்சகருமாயிருக்கிறார். அவர் தெய்வத்துவமுள்ளவர். இயேசுகிறிஸ்து நம்முடைய தேவனாகவும், இரட்சகராகவும் இருந்து நம்மை இரட்சித்திருக்கிறார். அதே வேளையில் அவர் மனுஷத்துவமுள்ளவர். தேவகுமாரனாகிய இயேசுகிறிஸ்து மனுஷரூபமெடுத்து இப்பிரபஞ்சத்தில் அவதரித்தார். பிதாவின் சித்தத்திற்குத் தம்மை முற்றிலுமாய் ஒப்புக்கொடுத்தார். ஒரு மனுஷனைப்போல பாடுகளை அனுபவித்தார். மரணத்தை ருசிபார்த்தார். அவர் தேவனாகயிருந்து மனுக்குலத்தை ஆசீர்வதிக்கிறார். அவரே நம்மை சகல அக்கிரமங்களிலிருந்து மீட்டுக்கொண்டவர்.

நம்மை மீட்டுக் கொள்வதற்கு, மீட்பின் கிரயமாக, நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, தம்முடைய சொந்த இரத்தத்தையே மீட்பின் கிரயமாகச் செலுத்தினார். நம்மைச் சுத்திகரிக்கும்படி, அவர் நமக்காக தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார். பிதாவானவர் தம்முடைய குமாரனை நம்முடைய இரட்சிப்புக்காகக் கொடுத்தார். குமாரனாகிய இயேசு கிறிஸ்துவோ தம்மைத்தாமே நமக்காக ஒப்புக் கொடுத்தார். இயேசுகிறிஸ்து சுயாதீனமாக, மனப்பூர்வமாக தம்மைத் தாமே நமக்காக ஒப்புக்கொடுத்தார்.

குமாரனாகிய இயேசுகிறிஸ்து மனுக்குலத்தை மீட்பதற்காகவும், நமக்கு பாவநிவாரணத்தை உண்டு பண்ணுவதற்காகவும் தம்மையே பாவநிவாரண பலியாக ஒப்புக்கொடுத்தார். பிதாவாகிய தேவன் குமாரனாகிய இயேசுகிறிஸ்துவின் பாவநிவாரண பலியை அங்கீகரித்தார். கிறிஸ்துவினுடைய மரணத்தின் மூலமாய் நமக்கு பாவநிவாரணமுண்டாயிற்று. நம்முடைய சகல அக்கிரமங்களிலிருந்தும் நமக்கு மீட்பு உண்டாயிற்று. இயேசுகிறிஸ்துவின் மானிட சுபாவம், அவரையே ஜீவபலியாக ஒப்புக்கொடுத்திருக்கிறது. அவருடைய தெய்வீக சுபாவம், நம்மைச் சுத்திகரிக்கிறது. கிறிஸ்துவின் மானிட சுபாவம் பலிபீடத்தில் செலுத்தப்படும் பலியாகயிருக்கிறது. அவருடைய தெய்வீக சுபாவமோ பலிசெலுத்தப்படும் பலிபீடமாகயிருக்கிறது. பலிபீடம் பலியைச் சுத்திகரிக்கிறது.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நமக்காகவே மரித்தார். அவர் நமக்காக தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார். நம்முடைய பாவங்களினி மித்தம் நாமே மரிக்கவேண்டியவர்கள். ஆனால் குமாரனாகிய இயேசு கிறிஸ்துவோ, நமக்கு பாவநிவாரணத்தை உண்டுபண்ணுவதற்காக, நமக்காக, நாம் மரிக்க வேண்டிய ஸ்தானத்தில், மரித்தார். இயேசுகிறிஸ்து நம்மை நேசித்தார். நமக்காக தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார். நமக்காக ஜீவனைக் கொடுத்த இயேசுகிறிஸ்துவுக்கு நம்மை ஒப்புக்கொடுக்கவேண்டும். அவரை நம்முடைய தேவனாகவும், இரட்சகராகவும் அங்கீகரித்து, அவரிடத்தில் அன்புகூர வேண்டும்.

இயேசுகிறிஸ்து நமக்காகத் தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்ததினால் நமக்கு ஏராளமான ஆவிக்குரிய ஆசீர்வாதங்கள் உண்டாயிற்று. தம்முடைய மரணத்தின் மூலமாய் அவர் நம்மை சகல அக்கிரமங்களிலிருந்தும் மீட்டுக்கொண்டார். நாம் அவபக்தியையும் லௌகிக இச்சைகளையும் வெறுக்க வேண்டும். ஆனால் நாமோ அவபக்தியுள்ளவர்களாகவும், லௌகிக இச்சைகளை இச்சிக்கிறவர்களாகவும் இருந்தோம். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த அக்கிரமங்களிலிருந்து நம்மை மீட்டுக் கொள்வதற்காக, தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார். நம்முடைய அக்கிரமங்களை நம்மைவிட்டு நீக்கினார்.

மனுஷன் தன் சுபாவத்தினால் பாவத்தை நேசித்து, பாவத்தில் ஜீவிக்கிறான். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோ நம்முடைய பாவங்களிலிருந்து நம்மை மீட்பதற்காக, தம்முடைய சொந்த இரத்தத்தையே, நம்மை மீட்கும் கிரயமாகச் செலுத்தினார். இயேசுகிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மைச் சுத்திகரிக்கிறது. இயேசு கிறிஸ்துவின் ஆள்தத்துவம் மகிமையானது. உன்னதமானது. அவர் தெய்வத்துவமுள்ளவர். தேவனே நமக்காக பாடுகளை அனுபவித்தார். அவர் தம்முடைய தெய்வத்துவத்தில் பாடுகளை அனுபவிக்காமல், தம்முடைய மனுஷத்துவத்தில் நமக்காக பாடுகளை அனுபவித்தார். மகாதேவனும், நம்முடைய இரட்சகருமான இயேசுகிறிஸ்து நமக்காக தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார். இயேசுகிறிஸ்துவின் மரணத்தினால் நமக்கு சகல அக்கிரமங்களிலிருந்தும் மீட்பு உண்டாயிற்று.

இயேசுகிறிஸ்து தம்முடைய மரணத்தினால் நம்மை தமக்குரிய சொந்த ஜனங்களாக மாற்றியிருக்கிறார். நாம் கர்த்தருக்கு விசேஷித்தவர்கள். கிறிஸ்துவின் மரணத்தினால் நாம் எந்த நற்கிரியைகளையும் செய்ய சுத்திகரிக்கப்பட்டிருக்கிறோம். நாம் இப்பிரபஞ்சத்தில் தெளிந்த புத்தியுள்ளவர்களாக, நீதியும் தேவபக்தியும் உள்ளவர்களாக இவ்வுலகத்திலே ஜீவனம்பண்ணவேண்டும். இயேசு கிறிஸ்து நம்முடைய அக்கிரமங்களிலிருந்து நம்மை மீட்டுக் கொள்வதற்காகவும், நம்மை சுத்திகரிப்பதற்காகவும் தம்மைத்தாமே ஒப்புக் கொடுத்தார். பாவத்தின் ஆக்கினையிலிருந்து நம்மை விடுவிப்பதற்காக இயேசு கிறிஸ்து தம்முடைய இரத்தத்தைச் சிந்தினார். இதன் மூலமாய் அவர் நம்மை தேவனுக்கு விசேஷித்த ஜனங்களாக மாற்றியிருக்கிறார்.

உலகப்பிரகாரமான ஜனங்கள் அக்கிரமங்களிலும் துன்மார்க்கங்களிலும் நிரம்பியிருக்கிறார்கள். கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாமோ பக்திவைராக்கியமுள்ளவர்களாக சுத்திகரிக்கப்பட்டிருக்கிறோம். நமக்கு பாவத்திலிருந்து மீட்பு உண்டாயிருக்கிறது. பாவிகளாகயிருந்த நம்மை கர்த்தராகிய இயேசுகிறிஸ்து தம்முடைய இரத்தத்தினால் கழுவி சுத்திகரித்திருக்கிறார். நம்முடைய அக்கிரமங்கள் மன்னிக்கப்பட்டதினாலும், நாம் சுத்திகரிப்பட்டதினாலும், நாம் தேவனுக்கு விசேஷித்த ஜனங்களாகயிருக்கிறோம்.

விசேஷித்த ஜனங்கள் விசேஷித்த காரியங்களைச் செய்வார்கள். அக்கிரமங்களிலிருந்து மீட்டுக் கொள்ளப்பட்ட நாம் சகல நற்கிரியைகளையும் செய்ய பக்தி வைராக்கியமுள்ளவர்களாயிருக்கிறோம். நாம் தேவனுக்குரியவர்கள். அவருடைய சொந்த ஜனங்கள். அவருக்கு விசேஷித்தவர்கள். நற்கிரியைகளைச் செய்கிறவர்கள். பக்தி வைராக்கியமுள்ளவர்கள்.

## இவைகளை நீ பேசி
## தீத் 2:15

**தீத் 2:15. இவைகளை நீ பேசி, போதித்து, சகல அதிகாரத்தோடும் கடிந்து கொள். ஒருவனும் உன்னை அசட்டைபண்ண இடங் கொடாதிருப்பாயாக.**

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு அவருடைய ஊழியத்தைக் குறித்துப் புத்திசொல்லுகிறார். அவர் எதைப் போதிக்க வேண்டுமென்றும், எப்படி போதிக்கவேண்டுமென்றும் அவருக்குக் கட்டளை கொடுக்கிறார். தீத்து “இவைகளை” பேசி, போதிக்கவேண்டும். “இவைகளை” என்பது பவுல் இதற்கு முன்பு எழுதியிருக்கிற எல்லா காரியங்களையும் குறிக்கும் வார்த்தை.

சுவிசேஷத்தின் சத்தியங்களையும், அதன் கடமைகளையும் தீத்து போதிக்க வேண்டும். ஜனங்கள் பாவங்களைவிட்டு விலகி ஜீவிக்கவேண்டும். தெளிந்த புத்தியும், நீதியும், தேவபக்தியும் உள்ளவர்களாய் இவ்வுலகத்திலே ஜீவனம் பண்ண வேண்டும். அவபக்தியையும் லௌகிக இச்சைகளையும் வெறுக்க வேண்டும்.

தீத்து இந்தச் சத்தியங்களைப் போதிக்கும் போது, நிச்சயமில்லாமல் ஏனோதானோ என்று பேசக்கூடாது. இந்தச் சத்தியங்களை சகல அதிகாரத்தோடும் பேசி அவர்களைக் கடிந்துகொள்ளவேண்டும். சுவிசேஷத்தின் சத்தியங்களையும், அதன் அவசியத்தையும் அதிகாரத்தோடு பேசவேண்டும். அதிகாரத்தோடு போதிக்க வேண்டும். அவர்களைக் கடிந்துகொள்ள வேண்டும். கர்த்தருடைய ஊழியக்காரர்கள் ஜீவனில்லாத பிரசங்கத்தை ஏனோதானோ என்று பிரசங்கம்பண்ணக் கூடாது. நாம் பரலோகத்தின் உபதேசங்களைப் போதிக்கிறவர்கள். இதை அதிகாரத்தோடும் ஜீவனோடும் போதிக்க வேண்டும்.

ஊழியக்காரரின் வார்த்தையில் உறுதியிருக்க வேண்டும். பாவங்களைக் கண்டித்து உணர்த்த வேண்டும். ஜனங்கள் சத்தியத்திற்கு விரோதமாக ஜீவிக்கும் போது, அவர்களுடைய பாவஜீவியத்தை கடிந்துகொள்ளவேண்டும். ஜனங்களுக்குச் சொல்ல வேண்டிய பிரகாரம் சொல்லவில்லையென்றால், அவர்களுடைய இருதயத்திற்குள் சத்தியம் போய்சேராது. சுவிசேஷத்தைக் கேட்கிறவர்கள் அதற்கு செவி கொடுக்கமாட்டார்கள். தங்கள் இருதயத்தை அடைத்துக்கொள்வார்கள். அப்படிப்பட்ட ஜனங்களுக்கு சகல அதிகாரத்தோடு போதித்து, அவர்களைக் கடிந்துகொள்ள வேண்டும். தேவனுடைய நாமத்தினால் அவர்களைக் கடிந்து கொள்ளலாம். கர்த்தருடைய ஊழியக்காரர்கள் திறப்பின் வாசலில் நின்று துன்மார்க்கரைக் கடிந்துகொள்கிற ஊழியத்தைச் செய்கிறார்கள்.

ஒருவனும் தன்னை அசட்டைபண்ண, தீத்து யாருக்கும் இடங்கொடுக்கக்கூடாது. தீத்து சுவிசேஷத்தின் சத்தியத்தைப் பேசவேண்டியவர். சத்தியத்தைப் போதிக்க வேண்டியவர். தைரியமாகப் பேச வேண்டியவர். பாவத்தை வைராக்கியத்தோடு கடிந்துகொள்ள வேண்டியவர். தன்னுடைய நடத்தையைக் குறித்து தீத்து மிகுந்த எச்சரிப்போடிருக்க வேண்டும். அவரை யாரும் அசட்டை பண்ணிவிடக் கூடாது. தன்னை அசட்டை பண்ணுவதற்கு தீத்து ஒருவனுக்கும் இடங்கொடுக்கக்கூடாது.

கர்த்தருடைய ஊழியக்காரர்கள் கிறிஸ்துவின் உபதேசத்தை இறுகப் பிடித்துக்கொள்ளும்போது, அவர்களை யாரும் அசட்டைபண்ண முடியாது. ஊழியக்காரர்கள் தைரியமாகவும், நம்பிக்கையோடும் தங்களுடைய ஊழியத்தை நிறைவேற்றலாம். தீத்து இளவயதுள்ள வாலிபர். முதிர் வயதுள்ளவர்கள் அவரை அசட்டை பண்ணுவதற்கு வாய்ப்புள்ளது. தீத்து தன்னுடைய வயதைப் பார்க்கக்கூடாது. கர்த்தர் தம்முடைய ஊழியத்தைச் செய்ய தீத்துவை நியமித்திருக்கிறார். மற்றவர்களுக்குப் பிரசங்கம்பண்ணும்போது தீத்து கர்த்தரையே பார்க்கவேண்டும். தன்னை தம்முடைய ஊழியத்திற்கு அபிஷேகித்த கர்த்தரையே தீத்து நோக்கிப் பார்க்க வேண்டும். தீத்துவிடம் தாழ்மையிருக்க வேண்டும். ஆனால் தாழ்வு மனப்பான்மை இருக்கக்கூடாது.

# 3 அதிகாரம்

விசுவாசிகளின் கடமைகள் (தீத் 3:1-8). தீத்து விட்டு விலகவேண்டிய காரியங்கள் (தீத் 3:9-14). முடிவுரை (தீத் 3:15).

## நினைப்பூட்டு
## தீத் 3 : 1,2

**தீத் 3:1. துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் கீழ்ப்படிந்து அடங்கியிருக்கவும், சகலவிதமான நற்கிரியைகளையும் செய்ய ஆயத்தமாயிருக்கவும்,**

**தீத் 3:2. ஒருவனையும் தூஷியாமலும், சண்டைபண்ணாமலும், பொறுமையுள்ளவர்களாய் எல்லா மனுஷருக்கும் சாந்தகுணத்தைக் காண்பிக்கவும் அவர்களுக்கு நினைப்பூட்டு.**

சபையில் பல்வேறு விதமான ஜனங்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் கடமைகள் உண்டு. அவற்றை அவர்கள் உண்மையாயும் நேர்த்தியாயும் நிறைவேற்றவேண்டும். கர்த்தருடைய ஊழியக்காரர்கள் நினைப்பூட்டுகிற ஊழியத்தைச் செய்யவேண்டும். பொதுவாக ஜனங்கள் தங்கள் கடமைகளை மறந்துவிடுவார்கள். ஞாபகமறதி உள்ளவர்களுக்கு அவர்களுடைய கடமைகளை நினைப்பூட்டுவது அவசியமாயிருக்கிறது.

கிரேத்தா தீவார் துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் கீழ்ப்படிந்து அடங்கியிருக்க வேண்டுமென்று அவர்களுக்கு நினைப்பூட்டவேண்டும். எல்லா அதிகாரிகளுக்கும் அவர்கள் கீழ்ப்படியவேண்டும். நியாயம் எதுவோ, கண்ணியம் எதுவோ, நீதி எதுவோ அதற்கு கர்த்தருடைய பிள்ளைகள் கீழ்ப்படியவேண்டும். கிறிஸ்தவ விசுவாசிகள் துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் கீழ்ப்படியாதவர்களென்றும், அவர்கள் அடங்காதவர்களென்றும் ஆதித்திருச்சபை காலத்தில் தவறான அபிப்பிராயம் இருந்தது. விசுவாசிகள் பிரிவினை வாதிகளென்றும், அவர்கள் யாருக்கும் கட்டுப்படமாட்டார்களென்றும், அரசாங்கத்திற்குக் கீழ்ப்படியாமல் கலகம் பண்ணுவார்களென்றும் அவர்களைப்பற்றி துர்ப்பிரச்சாரம் செய்தார்கள்.

ஆனால் கர்த்தருடைய பிள்ளைகளோ துரைத்தனங்களுக்கும் அதிகாரங்களுக்கும் கீழ்ப்படிந்து அடங்கியிருக்கவேண்டும். தங்களுக்கு மேலான அதிகாரங்களுக்குக் கீழ்ப்படிவது விசுவாசியின் கடமை. அதிகாரத்திற்குக் கீழ்ப்படிவதன் மூலமாய் விசுவாசிகள் தங்கள் நற்சாட்சியை மற்றவர்களுக்கு வெளிப்படுத்தவேண்டும்.

விசுவாசிகள் சகலவிதமான நற்கிரியைகளையும் செய்ய ஆயத்தமாயிருக்க வேண்டுமென்று அவர்களுக்கு நினைப்பூட்டவேண்டும். தங்களுக்கு வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் விசுவாசிகள் நற்கிரியைகளைச் செய்யவேண்டும். நாம் பிறருக்கு தீங்கு செய்யாமலிருந்தால் மாத்திரம் போதாது. அவர்களுக்கு நன்மையும் செய்யவேண்டும். நாம் நல்ல வார்த்தைகளை பேசினால் மாத்திரம் போதாது. நாம் நற்கிரியைகளையும் செய்யவேண்டும். கிரியையில்லாத விசுவாசம் செத்ததாயிருக்கிறது. அதுபோலவே நற்கிரியையில்லாத நல்வார்த்தை அர்த்தமற்றதாகயிருக்கிறது. விசுவாசிகள் நற்கிரியைகளை செய்தால் மாத்திரம் போதாது, நற்கிரியைகளைச் செய்வதற்கான வாய்ப்புக்களைத் தேடி கண்டுபிடிக்கவும் வேண்டும்.

விசுவாசிகள் ஒருவனையும் தூஷியாமலிருக்க வேண்டுமென்று அவர்களுக்கு ஞாபகப்படுத்தவேண்டும். நாம் மற்றவர்களைப்பற்றி நல்ல வார்த்தைகளினால் புகழாவிட்டாலும், அவர்களை தூஷிக்காமலாவது இருக்கவேண்டும். யார்மீதும் தேவையில்லாமல் வீண்பழி போடக்கூடாது. மற்றவர்களைப்பற்றி தீயவார்த்தைகளைப் பேசுவதில் சந்தோஷப்படக்கூடாது. நம்மால் முடிந்தவரையிலும் பிறருக்கு நன்மை செய்யவேண்டும். பிறரைப்பற்றி நன்மையான வார்த்தைகளையே பேசவேண்டும்.

வீண்கதைகளை பேசுகிறவர்களைப் போலவும், கட்டுக்கதைகளைப் பேசுகிறவர்களைப் போலவும், புறங்கூறுகிறவர்கள்போலவும் நாம் அலப்பிக்கொண்டிருக்கக்கூடாது. இங்கும் அங்கும் அலைந்து யாரையும் தூஷிக்கக்கூடாது. விசுவாசிகள் இப்படிப்பட்ட தப்பிதங்களை சாதாரணமாகச் செய்துவிடுவார்கள். இது பாவம் என்பதைக்கூட உணரமாட்டார்கள். ஆகையினால் விசுவாசிகள் ஒருவரையும் தூஷிக்கக்கூடாது என்று அவர்களுக்கு நினைப்பூட்டவேண்டும். நாம் பரலோகத்தில் நித்திய காலமாக ஜீவிக்கவேண்டியவர்கள். பரலோக ஜீவியத்திற்கு பூலோகத்தில் பயிற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். இங்கு நாம் மற்றவர்களைத் தூஷித்தால் பரலோகத்தில் நமக்குப் பங்கும் இருக்காது. பாத்தியமும் இருக்காது. பரலோகத்தில் தேவனைத் துதிக்கிற துதி மாத்திரமே நிரம்பியிருக்கும். அங்கு தூஷண வார்த்தைக்கு இடமேயில்லை. பிறரைத் தூஷிப்பதில் பிரியப்படுகிறவர்கள் பரலோகத்தில் சந்தோஷமாயிருக்கமாட்டார்கள்.

விசுவாசிகள் சண்டைபண்ணக் கூடாது என்று அவர்களைக்கு நினைப்பூட்டவேண்டும். விசுவாசிகள் வாயின் வார்த்தைகளினாலும் சண்டைபோடக்கூடாது. கைகளின் பலத்தினாலும் சண்டைபோடக்கூடாது. போட்டிகளும் பொறாமைகளும், வாக்குவாதங்களும் மனுஷருடைய மாம்ச இச்சைகளினால் உண்டாகிறது. மாம்ச இச்சைகளை கட்டுப்படுத்தவேண்டும். இவற்றை சிலுவையில் அறையவேண்டும்.

விசுவாசிகள் பொறுமையுள்ளவர்களாய் இருக்கவேண்டுமென்றும், எல்லா மனுஷருக்கும் சாந்தகுணத்தைக் காண்பிக்க வேண்டுமென்றும் அவர்களுக்கு நினைப்பூட்டவேண்டும். நம்முடைய வார்த்தைகளைக் கோபத்தோடு பயன்படுத்தக்கூடாது. நம்மிடம் சாந்தகுணம் இருக்கவேண்டும். அவசரப்படக்கூடாது. எளிதில் கோபப்படக் கூடாது. பொறுமையுள்ளவர்களாயிருக்கவேண்டும். நாம் சமாதானம்பண்ணுகிறவர்கள். சண்டை போடுகிறவர்களல்ல. கர்த்தருடைய பிள்ளைகள் நீடிய பொறுமையுள்ளவர்களாயிருக்க வேண்டும்.

விசுவாசிகள் எல்லா மனுஷருக்கும் சாந்தகுணத்தைக் காண்பிக்கவேண்டும். நம்முடைய இருதயத்தில் சாந்தகுணம் இருந்தால் மாத்திரம் போதாது. அது நம்முடைய வார்த்தையிலும் நடத்தையிலும் வெளிப்படவேண்டும். நம்முடைய நெருங்கிய சிநேகிதருக்கும், உற்றார் உறவினருக்கும் மாத்திரம் நம்முடைய சாந்தகுணத்தைக் காண்பித்தால் போதாது. எல்லா மனுஷருக்கும் நம்முடைய சாந்தகுணத்தைக் காண்பிக்கவேண்டும். ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள். சாந்த குணமுள்ளவர்கள் உலகத்தைச் சுதந்தரிப்பார்கள். கிறிஸ்துவை விசுவாசிக்கிற நாம் அவருடைய சுபாவத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டும். அவருடைய சாயலைத் தரித்துக்கொள்ளவேண்டும். இப்படிப்பட்ட நல்ல சுபாவங்களெல்லாம் விசுவாசிகளிடத்தில் காணப்பட வேண்டுமென்று தீத்து அவர்களுக்கு நினைப்பூட்டவேண்டும்.

## முற்காலத்திலே நாமும்
## தீத் 3:3

**தீத் 3:3. ஏனெனில், முற்காலத்திலே நாமும் புத்தியீனரும், கீழ்ப் படியாதவர்களும், வழிதப்பி நடக்கிறவர்களும், பலவித இச்சைகளுக்கும் இன்பங்களுக்கும் அடிமைப் பட்டவர்களும், துர்க்குணத்தோடும் பொறாமையோடும் ஜீவனம்பண்ணுகிறவர்களும், பகைக்கப் படத்தக்கவர்களும், ஒருவரையொருவர் பகைக்கிறவர்களுமாயிருந்தோம்.**

நாம் இப்போது கர்த்தரை விசுவாசித்து அவருடைய பிள்ளைகளாக யிருக்கிறோம். இரட்சிக்கப்படுவதற்கு முன்பாக நம்முடைய ஜீவியம் பாவத்தினால் நிறைந்திருந்தது. பவுல் இதைப்பற்றிச் சொல்லும்போது, "முற்காலத்திலே இப்படி இருந்தோம்" என்று சொல்லி, அக்காலத்திலே எப்படியெல்லாம் இருந்தோமென்று விவரிக்கிறார்.

முற்காலத்திலே நாம் புத்தியீனராயிருந்தோம். நம்மிடத்தில் மெய்யான ஆவிக்குரிய ஞானமில்லை. ஆவிக்குரிய சத்தியங்களை நாம் புரிந்துகொள்ளவில்லை. பரலோகத்தின் காரியங்களை நாம் அறியாதவர் களாயிருந்தோம். பல சமயங்களில் நாம் மற்றவர்களை புத்தியீனர் என்று சொல்லிவிடுகிறோம். நம்மைநாமே நிதானித்து அறியும்போதுதான் நம்முடைய புத்தியீனம் நமக்குத் தெரியவரும். நாம் எந்தெந்த விஷயத்திலெல்லாம் புத்தியீனராயிருந்தோம் என்பதை சிந்தித்துப் புரிந்துகொள்ளவேண்டும்.

முற்காலத்திலே நாம் கீழ்ப் படியாதவர்களாயிருந்தோம். நம்முடைய இருதயம் கடினமாகயிருந்தது. தலைக்கனம் பிடித்தவர்களாகவும், முரட்டுக் குணமுடையவர்களாகவும் இருந்தோம். நமக்கு யார் புத்திமதிகளைச் சொன்னாலும் செவிகொடுத்து கேட்கமாட்டோம். கர்த்தருடைய வார்த்தைக்கு எதிர்த்து நின்றோம். இரட்சிக்கப்படாத ஜனங்களிடத்தில் புத்தியீனமும் கீழ்ப்படியாமையும் இணைந்து கிரியை நடப்பிக்கும். இவர்கள் தேவனுக்கும் அவருடைய பிரமாணத்திற்கும் கீழ்ப்படியமாட்டார்கள். இயற்கையின் பிரமாணத்திற்கும், வெளிப்படுத்தப்பட்டிருக்கிற பிரமாணத்திற்கும் கீழ்ப்படியமாட்டார்கள். யாருக்கும், எதற்கும் கீழ்ப்படியமாட்டார்கள்.

முற்காலத்திலே நாம் வழிதப்பி நடக்கிறவர்களாயிருந்தோம். வஞ்சிக்கப்பட்டிருந்தோம். சத்தியத்தின் வழியிலும், பரிசுத்தத்தின் வழியிலும் நடக்காமல், வேறு வழிகளில் வழிதப்பி நடந்தோம். பாதை தெரியாமல் அலைந்துகொண்டிருந்தோம். மனுஷரிடத்தில் தெளிந்த புத்தியில்லையென்றால் அவர் வழிதப்பி நடப்பார். வழிதப்பி நடக்கிறவர்கள் தங்கள் ஆத்துமாவில் பலவீனராயிருப்பார்கள். சாத்தானுடைய சோதனைகளுக்கு தங்களை எளிதில் ஒப்புக்கொடுத்துவிடுவார்கள். இவர்களை மனுஷர் எளிதாக வஞ்சித்துவிடுவார்கள். வழிதப்பி போகச்செய்வார்கள்.

முற்காலத்திலே நாம் பலவித இச்சைகளுக்கும் இன்பங்களுக்கும் அடிமைப்பட்டவர்களாயிருந்தோம். உலகப்பிரகாரமான ஜனங்கள் இவ்வுலகத்தின் ஆசாபாசங்களை அனுபவிக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். இதுவே பெரிய சந்தோஷம் என்று நினைக்கிறார்கள். இவர்களுக்கு மெய்யான சந்தோஷம் எது என்றும், நித்திய சந்தோஷத்தை எப்படி பெற்றுக்கொள்வதும் என்றும் தெரியவில்லை. இச்சைகளையும் இன்பங்களையும் அனுபவிக்க ஆசைப்படுகிறவர்கள் அவற்றிற்கு அடிமைகளாகயிருக்கிறார்கள்.

பாவத்திற்கு அடிமையாக இருக்கிறவர்களுக்கு ஏராளமான எஜமான்கள் உண்டு. பாவத்திற்கு அடிமைப்பட்டவரை ஒரு இச்சை ஒரு வழியில் நடத்தும். மற்றொரு இச்சை அவரை வேறு வழியில் நடத்தும். இவர் எந்த வழியில் போவது என்று தெரியாமல், நிலைதடுமாறிக் கொண்டிருப்பார். இச்சைகளையும் இன்பங்களையும் அனுபவிக்கிறவர்கள் தங்களுக்கு ஏராளமான சுதந்தரமுண்டு என்று நினைப்பார்கள். ஆரம்பத்தில் அவர்களுக்கு சுதந்தரம் இருப்பதுபோல தெரியும். இது ஒரு மாயை. இப்படிப்பட்டவர்கள் வெகுசீக்கிரத்திலே பலவித இச்சைகளுக்கும் இன்பங்களுக்கும் அடிமைகளாகிவிடுவார்கள்.

முற்காலத்திலே நாமோ துர்குணத்தோடு ஜீவித்தோம். பொறாமையோடு ஜீவனம்பண்ணினோம். துர்குணமுள்ளவர்கள் மற்றவர்களுக்கு தீங்கு செய்ய ஆசைப்படுவார்கள். பிறர் துன்பங்களை அனுபவிக்கும்போது இவர்கள் சந்தோஷப்படுவார்கள். பொறாமைப்படுகிறவர்கள் மற்றவர்கள் நன்றாயிருந்தால் சகித்துக் கொள்ளமாட்டார்கள். துர்குணமும் பொறாமை குணமும் சாத்தானுடைய சுபாவம். இவை இரண்டுமே மனக்கசப்பிலிருந்து வெளிவருகிறது. மனுஷருடைய மனக்கசப்பு அநேக தீயசுபாவங்களுக்கு ஊற்றாகயிருக்கிறது.

முற்காலத்திலே நாம் ஒருவரையொருவர் பகைக்கிறவர் களாயிருந்தோம். கர்த்தருடைய பரிசுத்தவான்கள் ஒருவரையொருவர் நேசிக்கவேண்டும். நம்மிடத்தில் அன்புகூருவதுபோல பிறரிடத்தில் அன்புகூரவேண்டும். இதுவே நமக்கு மெய்யான சந்தோஷம். ஆனால் பாவிகளோ ஒருவரையொருவர் பகைக்கிறார்கள். பகையினால் கோபங்களும், விரோதங்களும், சண்டைகளும், இரத்தம் சிந்துதலும் உண்டாகும்.

நாம் முற்காலத்திலே எப்படியிருந்தோம் என்பதை நினைவுகூரவேண்டும். நம்முடைய பழைய பாவஜீவியங்களையெல்லாம் விட்டுவிட்டு கர்த்தருக்குச் சித்தமான பிரகாரம் ஜீவிக்கவேண்டும். அவருடைய வார்த்தைக்கும், சித்தத்திற்கும் நாம் கீழ்ப்படியவேண்டும். தீயசுபாவங்கள் நம்மைவிட்டு நீங்கிப்போகவேண்டும். நற்கிரியைகளைச் செய்கிற நல்ல சுபாவங்களை நாம் பற்றிக்கொள்ளவேண்டும்.

## நம்மை இரட்சிப்பார்
## தீத் 3 : 4-7

**தீத் 3:4. நம்முடைய இரட்சகராகிய தேவனுடைய தயையும் மனுஷர்மேலுள்ள அன்பும் பிரசன்னமானபோது,**

**தீத் 3:5. நாம் செய்த நீதியின் கிரியைகளினிமித்தம் அவர் நம்மை இரட்சியாமல் தமது இரக்கத்தின்படியே, மறுஜென்ம முழுக்கினாலும், பரிசுத்த ஆவியினுடைய புதிதாக்குதலினாலும் நம்மை இரட்சித்தார்.**

**தீத் 3:6. தமது கிருபையினாலே நாம் நீதிமான்களாக்கப்பட்டு, நித்திய ஜீவனுண்டாகும் என்கிற நம்பிக்கையின்படி சுதந்தரராகத்தக்கதாக,**

**தீத் 3:7. அவர் நமது இரட்சகராகிய இயேசுகிறிஸ்து மூலமாய், அந்தப் பரிசுத்த ஆவியை நம்மேல் சம்பூரணமாய்ப் பொழிந்தருளினார்.**

கிரேத்தா தீவார் இப்போது இரட்சிக்கப்பட்டவர்களாகயிருக்கிறார்கள். அவர்களுடைய பழைய பாவஜீவியத்திலிருந்து விடுவிக்கப் பட்டிருக்கிறார்கள். கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாமோ நம்முடைய பழைய பாவசுபாவங்களுக்கு நீங்கலாகி இப்போது இரட்சிக்கப்பட்டிருக்கிறோம். நம்முடைய ஆத்தும இரட்சிப்பு நம்முடைய நீதியின் கிரியைகளினால் உண்டாகவில்லை. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து நாம் செய்த நீதியின் கிரியைகளினிமித்தம் நம்மை இரட்சிக்கவில்லை. அவர் நம்மை தம்முடைய கிருபையினாலும் இரக்கத்தினாலும் இரட்சித்திருக்கிறார். மறுஜென்ம முழுக்கினாலும் பரிசுத்த ஆவியினுடைய புதிதாக்குதலினாலும் நம்மை இரட்சித்திருக்கிறார் (தீத் 3:5).

நம்முடைய இரட்சகராகிய தேவனே நம்முடைய ஆத்தும இரட்சிப்புக்கு காரணகர்த்தாவாக இருக்கிறார். ஆகையினால் பவுல் தேவனைப்பற்றிச் சொல்லும்போது, "இரட்சகராகிய தேவன்" என்று சொல்லுகிறார். கர்த்தரே நம்மை புதிதாக சிருஷ்டித்திருக்கிறார். நமக்கு ஆவிக்குரிய ஆசீர்வாதங்களை ஏராளமாகக் கொடுத்திருக்கிறார். நம்முடைய புதிய ஜீவனில் நாம் பெற்றுக்கொண்டிருக்கிற எல்லா ஆசீர்வாதங்களும் இரட்சராகிய தேவனிடமிருந்தே நமக்கு வருகிறது. பாவத்தில் விழுந்துபோன ஆதாம், ஜீவனையும் சந்தோஷத்தையும் இழந்துவிட்டார். ஆதாம் இழந்துபோனதை, கர்த்தர் நமக்கு திரும்பக் கொடுத்திருக்கிறார். அவரே நம்முடைய பிதாவாகிய தேவன். பிதாவானவர் நம்முடைய இரட்சிப்பை ஆரம்பித்து வைத்திருக்கிறார். குமாரனாகிய இயேசுகிறிஸ்து மனுக்குலத்திற்கு இரட்சிப்பை உண்டுபண்ணி அதை நிர்வாகம்பண்ணுகிறார். பரிசுத்த ஆவியானவரோ எல்லா கிரியைகளையும் செய்து சகலவற்றையும் பரிபூரணப்படுத்துகிறார்.

தேவன் மனுஷர்மீது தயவும் அன்பும் காண்பிக்கிறார். தேவனுடைய கிருபையினால் நம்முடைய பழைய பாவஜீவங்களிலிருந்து நாம் இரட்சிக்கப்பட்டிருக்கிறோம். நம்முடைய இரட்சிப்புக்கு தேவகிருபையே ஆதாரம். மனுஷன் பாவம் செய்து துன்மார்க்கமாய் ஜீவிக்கிறான். பாவத்தின் சம்பளம் மரணம். பாவத்தினால் சாபமும், சாபத்தினால் வியாதியும், மரணமும் மனுஷனுக்கு உண்டாகிறது. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவோ சாபத்திலிருந்தும், வேதனைகளிலிருந்தும், மரணத்திலிருந்தும் நம்மை மீட்டு இரட்சித்திருக்கிறார். நம்முடைய இரட்சராகிய தேவனுடைய தயையும், மனுஷர் மேலுள்ள அவருடைய அன்பும் பிரசன்னமானபோது, அவர் நம்மை தம்முடைய கிருபையினால் இரட்சிக்கிறார்.

பாவத்தினால் மனுஷனுக்கு பாடுகளும், வேதனைகளும், வருத்தங்களும், துன்பங்களும் உண்டாயிற்று. மனுஷன் தேவனுக்கு விரோதமாகப் பாவம் செய்வதினால் அவனுக்கு விரோதமாக தேவனுடைய கோபம் வந்திருக்கிறது. ஆனால் தேவனோ, நம்மீது தம்முடைய கோபத்தைக் காண்பிப்பதற்குப் பதிலாக, அவர் நம்மீது தயையும் அன்பும் காண்பிக்கிறார். தேவன் தம்முடைய நீதியினால், நம்முடைய பாவத்தினிமித்தமாக நம்மை அழிக்கவேண்டும். ஆனால் கர்த்தரோ தம்முடைய இரக்கத்தினாலும், அன்பினாலும், தயையினாலும், நம்மை அழித்துப்போடாமல் இரட்சிக்கிறார். நம்மீது இரக்கம் காண்பிப்பதில் தேவன் பிரியப்படுகிறார்.

தேவனுடைய அன்பும் கிருபையும் சுவிசேஷத்தில் பிரசன்னமாகியிருக்கிறது. சுவிசேஷம் பிரசன்னமானபோதுதான் தேவனுடைய இரக்கமும், அன்பும், தயவும் நமக்கு வெளிப்படுத்தப்படுகிறது. பரிசுத்த ஆவியானவரின் கிரியையினால் தேவனுடைய அன்பும் கிருபையும் பிரசன்னமாகியிருக்கிறது.

நம்முடைய ஆத்தும இரட்சிப்புக்கு நாம் பலமான அஸ்திபாரத்தை விசுவாசிக்கவேண்டும். தவறான உபதேசங்களை நம்மைவிட்டு நீக்கிப்போடவேண்டும். நாம் செய்த நீதியின் கிரியைகளினிமித்தம் தேவன் நம்மை இரட்சிக்கவில்லை. அவர் தமது இரக்கத்தின்படியே நம்மை இரட்சித்தார். இரட்சிக்கப்பட்டவர்கள் நீதியின் கிரியைகளைச் செய்யவேண்டும். நற்கிரியைகளைச் செய்யவேண்டும். ஆயினும் நம்முடைய நீதியின் கிரியைகளினால் நாம் இரட்சிக்கப்படுவதில்லை என்னும் சத்தியத்தை நாம் புரிந்துகொள்ளவேண்டும்.

பரலோகத்திற்குள் பிரவேசிக்கிறவர்களெல்லோருமே நற்கிரியைகளைச் செய்யவேண்டும். நீதியான கிரியைகள், நற்கிரியைகள் என்னும் பாதையின் வழியாகவே நாம் பரலோகத்திற்குள் பிரவேசிக்கிறோம். ஆயினும் பரலோகத்திற்குள் பிரவேசிப்பதற்கு, நம்முடைய நீதியின் கிரியைகள், நம்மைத் தகுதிப்படுத்தாது.

கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினால் நாம் இரட்சிக்கப்பட்டிருக்கிறோம். விசுவாசமும் கிருபையும் தேவனுடைய இலவசமான ஈவு. நம்முடைய கிரியைகளினிமித்தம் தேவன் நம்மை இரட்சிக்காமல், தம்முடைய கிருபையினாலும், கிரியையினாலும் நம்மை இரட்சித்திருக்கிறார். நம்முடைய இரட்சிப்புக்கு கிறிஸ்துவே காரணமானவர். அவரே நம்முடைய இரட்சிப்பை ஆரம்பித்து வைக்கிறவர். இரட்சிப்பின் அனுபவங்களை விருத்தியடையச்செய்து, மகிமையில் அதைப் பரிபூரணப்படுத்துகிறவர். இரட்சிப்பின் ஆசீர்வாதங்களெல்லாமே இயேசுகிறிஸ்துவிடமிருந்தே நமக்கு வருகிறது.

ஆத்தும இரட்சிப்புக்கு பலவிதமான பெயர்களைச் சொல்லலாம். மறுஜென்மம், ஆவியினுடைய புதிதாக்குதல் ஆகியவை இரட்சிப்பைக் குறிக்கிற வார்த்தை. தேவனுடைய கிருபையும், அவருடைய பரிசுத்தமும் நம்மை புதுமனுஷனாக மாற்றுகிறது. தேவன் தம்முடைய கிருபையினால் நம்மை நீதிமான்களாக்குகிறார். நமக்குள் புதிய சிந்தனைகளும், புதிய விருப்பங்களும், புதிய கரிசனைகளும் உண்டாகிறது.

கிறிஸ்துவே நம்மை இரட்சித்தார். தேவன் ஆரம்பித்து வைப்பதை தமக்கு ஏற்றவேளையிலே நிறைவேற்றுவார். நம்முடைய இரட்சிப்பை தேவனே ஆரம்பித்து வைத்தவர். அவருக்குச் சித்தமான வேளையில் அவர் நம்முடைய இரட்சிப்பை நிறைவேற்றுவார். இரட்சிப்பின் அனுபவத்தைப் பூரணப்படுத்துவார்.

மறுஜென்ம முழுக்கினால் நம்முடைய இரட்சகர் நம்மை இரட்சித்திருக்கிறார். இது நம்முடைய ஆத்தும இரட்சிப்பின் ஆரம்ப நிலை. பரலோகத்திலே நம்முடைய இரட்சிப்பு பரிபூரணப்படும். மறுஜென்மத்திற்குப் பதிலாக பரலோகத்திலே நமக்கு வேறு ஜென்மம் உண்டாகாது. நாம் இப்பூமியிலே இரட்சிக்கப்படும்போது, நம்முடைய மறுஜென்மத்தின் ஆரம்ப நிலையிலிருக்கிறோம். பரலோகத்திலே நம்முடைய மறுஜென்மத்தில் பூரண நிலையிலிருப்போம். அனுபவத்தின் அளவில் விருத்தி உண்டாகும். அனுபவம் மாறாது. மகிமையின் ஆரம்பமே தேவனுடைய கிருபை. கிருபை பூரணப்படும்போது மகிமையும் பூரணப்படும்.

மறுஜென்ம முழுக்கு நம்முடைய ஆத்தும இரட்சிப்புக்கு வெளிப்படையான அடையாளம். இதுவே நம்முடைய இரட்சிப்புக்குக் கொடுக்கப்படுகிற முத்திரை. பவுல் இதைப்பற்றிச் சொல்லும்போது தேவன் மறுஜென்ம முழுக்கினாலே நம்மை இரட்சித்தார் என்று சொல்லுகிறார் (தீத் 3:5). நம்முடைய ஆத்தும இரட்சிப்பு ஆவிக்குரியது. இது சரீரப்பிரகாரமானதல்ல. இரட்சிப்பின் அனுபவம் நமக்குள்ளாக நடைபெறுகிற சம்பவம். இரட்சிப்பு நமக்குள்ளே நடைபெற்றாலும், மறுஜென்ம முழுக்கினாலே, நம்முடைய ஆத்தும இரட்சிப்பு வெளியரங்கமாக உறுதிபண்ணப்பட்டு முத்திரை போடப்படுகிறது. நாம் ஞானஸ்நானம் பெறுவதினால் இரட்சிக்கப்படுவதில்லை. நம்முடைய இரட்சிப்புக்கு ஞானஸ்நானம் வெளிப்படையான அடையாளமாயிருக்கிறது.

நம்முடைய ஆத்தும இரட்சிப்புக்கு ஞானஸ்நானம் ஆதாரமல்ல. இது ஒரு அடையாளம் மாத்திரமே. ஆனாலும் இரட்சிக்கப்பட்டவர்கள் தங்களை ஞானஸ்நானத்திற்குட்படுத்தும் போது, அவர்கள் தேவனோடு உடன்படிக்கை பண்ணுகிறார்கள். இரட்சிக்கப்பட்டவர்கள் எப்படி ஜீவிக்கவேண்டுமோ அப்படி ஜீவிப்பதாக, கர்த்தருடைய பிள்ளைகள் ஞானஸ்நானத்தின் மூலமாய் தேவனோடு உடன்படிக்கை பண்ணுகிறார்கள். ஞானஸ்நானம் விசுவாசிகளின் கடமைகளை நமக்கு உறுதிபண்ணுகிறது. அதே வேளையில் நம்மை ஞானஸ்நானத்திற்கு ஒப்புக்கொடுப்பதன் மூலமாக தேவனுடைய ஆசீர்வாதங்களுக்கும், சிலாக்கியங்களுக்கும் நாம் பங்குள்ளவர்களாகிறோம்.

நம்முடைய இரட்சகராகிய தேவன் பரிசுத்த ஆவியினுடைய புதிதாக்குதலினாலும் நம்மை இரட்சித்திருக்கிறார். நம்முடைய ஆத்தும இரட்சிப்பில் பரிசுத்த ஆவியானவர் முக்கிய பங்கு வகிக்கிறார். நாம் ஆவியினால் பிறக்கவேண்டும். ஆவியினால் பரிசுத்தமாக்கப்படவேண்டும். ஆவியினால் வழிநடத்தப்படவேண்டும். ஆவியினால் பெலப்படுத்தப்படவேண்டும். பரிசுத்த ஆவியானவரின் உதவியைப் பெற்றுக்கொண்டு நம்முடைய ஆவிக்குரிய ஜீவியத்தில் நாம் முன்னேறிச் செல்லவேண்டும்.

கர்த்தருடைய பிள்ளைகள் ஒவ்வொருவரும் பரிசுத்த ஆவியானவரின் அபிஷேகத்திற்காக கருத்தாய் ஜெபிக்கவேண்டும். பரிசுத்த ஆவியானவரே நம்மை சகல சத்தியத்திற்குள்ளும் வழிநடத்துகிறவர். அவரே நம்மைப் பெலப்படுத்துகிறவர். பரிசுத்த ஆவியானவரை நமக்குள் அனல்மூட்டி எழுப்பிவிடவேண்டும். ஆவியானவரின் அபிஷேகம் நமக்குள் அவிந்துபோகக்கூடாது. பரிசுத்த ஆவியானவரின் ஆலோசனைகளுக்கும் கிரியைகளுக்கும் நாம் எதிர்த்து நிற்கக்கூடாது. கர்த்தருடைய ஆவியானவர் நம்மோடு எப்போதும் போராடுவதில்லை. நாம் ஆவியானவருக்கு துணிகரமாக எதிர்த்து நிற்கும்போது அவர் நம்மைவிட்டு விலகிப்போய்விடுவார்.

பிதாவாகிய தேவனானவர், நமது இரட்சகராகிய இயேசுகிறிஸ்து மூலமாய், பரிசுத்த ஆவியை நம்மேல் சம்பூரணமாய்ப் பொழிந்தருளியிருக்கிறார் (தீத்3:7). கிறிஸ்துவானவர் நமக்கு தம்முடைய ஆவியைத் தாராளமாய்க் கொடுக்கிறார். ஆவியானவரின் அபிஷேகம் நமக்கு இலவசமாகக் கொடுக்கப்படுகிற ஈவு. ஆவியானவர் தம்முடைய வரங்களையும், தம்முடைய கிருபைகளையும் நமக்கு இலவசமாகக் கொடுக்கிறார். கிறிஸ்துவானவர் தம்முடைய பரிசுத்த ஆவியானவரை, நம்மேல் சம்பூரணமாய்ப் பொழிந்தருளுகிறார்.

நியாயப்பிரமாணத்தின் காலத்தில், பழைய ஏற்பாட்டு பரிசுத்தவான்கள்மேல், பரிசுத்த ஆவியானவர் சம்பூரணமாய்ப் பொழிந்தருளப்படவில்லை. சுவிசேஷத்தின் காலத்திலிருக்கிற நமக்கோ, நம்முடைய இரட்சகராகிய இயேசுகிறிஸ்து, நம்மீது பரிசுத்த ஆவியானவரை சம்பூரணமாய்ப் பொழிந்தருளுகிறார். எல்லா காலங்களிலும் பரிசுத்த ஆவியானவர் சபையின்மீது பொழிந்தருளப்பட்டார். இயேசுகிறிஸ்து இந்தப் பூமியில் மனுஷராக அவதரித்ததற்குப் பின்பு, ஆவியானவரின் அபிஷேகம் சம்பூரணமாய்க் கொடுக்கப்படுகிறது. பரிசுத்த ஆவியானவருடைய அபிஷேகத்தின் அளவு அதிகரித்திருக்கிறது.

சுவிசேஷத்தின் காலம் கிருபையின் காலம். இக்காலத்தில் ஜீவிக்கிற கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம் பாக்கியவான்கள். பரிசுத்த ஆவியானவரின் அபிஷேகம் நம்மீது சம்பூரணமாய் ஊற்றப்படுகிறது. ஆவியானவரின் வரங்கள் நமக்கு தாராளமாய்க் கொடுக்கப்படுகிறது. கர்த்தர் தம்முடைய பிள்ளைகள் எல்லோரையும், தம்முடைய ஊழியத்திற்கு அழைக்கிறார். ஊழியத்திற்கு ஒப்புக்கொடுக்கிற எல்லோரையும் கர்த்தர் பயன்படுத்துகிறார். ஊழியக்காரர்களுக்கு விசேஷித்த வரங்களைக் கொடுக்கிறார்.

பழைய ஏற்பாட்டுக்காலத்து பரிசுத்தவான்களிடத்தில் காணப்பட்ட விசுவாசம், நம்பிக்கை, அன்பு ஆகியவற்றின் அளவு, புதியஏற்பாட்டுக் காலத்து பரிசுத்தவான்களிடத்தில் அதிகமாய்க் காணப்படுகிறது. ஆவியானவரின் அபிஷேகம் அதிக அளவில் கொடுக்கப்படுகிறது. அப்போஸ்தலர் பவுல் இந்த அளவை "சம்பூரணமான அளவு" என்று சொல்லுகிறார்.

பரிசுத்த ஆவியானவரின் அபிஷேகத்தில், நமக்குரிய பங்கை நாம் பெற்றுக்கொள்ளவேண்டும். ஆவியானவரின் அபிஷேகம் விசுவாசிகள்மீது சம்பூரணமாய் ஊற்றப்படும்போது, நாமும் அபிஷேகம் பெறாமல் விலகி ஒதுங்கியிருக்க வேண்டிய அவசியமில்லை. அபிஷேக மழையில் நனையாமலிருக்கவேண்டுமென்று ஒரு விசுவாசியும் தங்களை தனிமைப்படுத்த வேண்டிய அவசியமில்லை.

சுவிசேஷத்தின் காலத்தில் தேவன் தம்முடைய கிருபையையும், ஆவிக்குரிய ஆசீர்வாதங்களையும், அபிஷேகத்தின் மூலமாகவே நமக்கு வெளிப்படுத்துகிறார். ஆவியானவரின் அபிஷேகம் நமக்கு இல்லையென்றால் நமக்கு ஆவிக்குரிய ஆசீர்வாதங்களும் இல்லை.

நமக்கு கிருபையின் வரங்களும், ஆவிக்குரிய ஆசீர்வாதங்களும் சம்பூரணமாயும் தாராளமாயும் கொடுக்கப்படுகிறது. கிருபையின் காலத்தில் ஊற்றப்படுகிற ஆவியானவரின் அபிஷேகத்தை நாமும் பெற்றுக்கொள்ளவேண்டும். கர்த்தர் இதன் மூலமாய் நமக்குக் கொடுக்கிற ஆசீர்வாதங்களை பயபக்தியோடு பெற்றுக்கொள்ளவேண்டும். தேவனுடைய நாமத்தை மகிமைப்படுத்தவேண்டும்.

நமது இரட்சகராகிய இயேசுகிறிஸ்துவின் மூலமாகவே நமக்கு இரட்சிப்பு நியமிக்கப்பட்டிருக்கிறது. அவர் மூலமாகவே, பிதாவாகிய தேவன், நமக்கு பரிசுத்த ஆவியானவரின் அபிஷேகத்தைக் கொடுக்கிறார். தேவனுடைய ஆசீர்வாதங்கள் எல்லாமே இயேசுகிறிஸ்துவின் மூலமாகவே நமக்குக் கிடைக்கிறது. அவர் நம்முடைய இரட்சகராகயிருப்பதினால், தெய்வீக ஆசீர்வாதங்களெல்லாம் அவர் மூலமாய் நமக்கு வருகிறது. ஆகையினால் எல்லாவற்றிற்கும் மேலாக, நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்காக, பிதாவாகிய தேவனை நாம் ஸ்தோத்திரம்பண்ணவேண்டும்.

இயேசுகிறிஸ்துவின் மூலமாகவே நாம் தேவனுடைய சமுகத்திற்கு முன்பாக பிரவேசிக்கவேண்டும். நம்மிடத்தில் தேவனுடைய கிருபை இருக்குமென்றால் அதற்காக கிறிஸ்துவை ஸ்தோத்திரம்பண்ண வேண்டும். தேவகிருபைக்காக, பிதாவாகிய தேவனோடும் பரிசுத்த ஆவியானவரோடும் நாம் கிறிஸ்துவை ஸ்தோத்திரம்பண்ண வேண்டும். தேவகிருபையில் நாம் அதிகம் அதிகமாய்ப் பெருகவேண்டும்.

நம்முடைய இரட்சகராகிய இயேசுகிறிஸ்து, தமது இரக்கத்தின்படியே, நம்மை இரட்சித்திருக்கிறார். நமக்கு புதிய ஜீவனைக் கொடுத்திருக்கிறார். தேவனுடைய கிருபையினாலே நாம் நீதிமான்களாக்கப்பட்டிருக்கிறோம். தேவனுடைய எல்லா ஆசீர்வாதங்களுக்கும் நாம் சுதந்தரராக ஆக்கப்பட்டிருக்கிறோம். நமக்கு நித்திய ஜீவன் உண்டாயிருக்கும் என்னும் நம்பிக்கை வந்திருக்கிறது (தீத் 3:6).

பாவம் செய்கிறவர்களெல்லோரும் தேவனுடைய சமுகத்திற்கு முன்பாக பாவிகளாகவே இருப்பார்கள். தேவன் பாவிகளாகயிருக்கிற நம்மை நீதிமான்களாக்குவது நமக்குக் கிடைத்திருக்கிற பெரிய சிலாக்கியம். இயேசுகிறிஸ்துவினுடைய நீதியின் மூலமாய், பிதாவாகிய தேவன், பாவிகளாகிய நம்மை, நீதிமான்களாக அங்கீகரிக்கிறார். கிறிஸ்துவின் நீதியை நாம் விசுவாசத்தினால் பெற்றுக்கொள்கிறோம்.

தேவன் நம்மை இலவசமாகவே நீதிமானாக்கியிருக்கிறார். ஆனாலும் நாம் நீதிமானாக்கப்படுவதற்கு இயேசுகிறிஸ்துவினுடைய பலியும், அவருடைய நீதியும் அவசியமாயிருக்கிறது. கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினாலேயே நாம் நீதிமானாக்கப்படுகிறோம். கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம், இயேசுகிறிஸ்துவின் பாவநிவாரண பலியிலும், அவருடைய நீதியிலும் நம்பிக்கை வைத்திருக்கவேண்டும்.

நம்முடைய இரட்சிப்பு தேவனுடைய கிருபையினால் நமக்கு உண்டாயிருக்கிறது. நம்முடைய மீட்பு இயேசுகிறிஸ்துவில் உண்டாயிருக்கிறது. நம்முடைய இரட்சிப்பை விசுவாசத்தோடு பெற்றுக்கொள்ளவேண்டும். நமக்கு இயேசுகிறிஸ்துவின் மூலமாய் நித்திய ஜீவன் உண்டாகும் என்று நம்பவேண்டும். இரட்சிக்கப்பட்டிருக்கிற நம்முடைய ஜீவியத்தில் ஆவியின் கனி வெளிப்படவேண்டும். நம்முடைய பேச்சிலும், கிரியைகளிலும் நாம் இரட்சிக்கப்பட்டவர்களைப்போல நடந்துகொள்ளவேண்டும். கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்கு நாம் கீழ்ப்படிந்து ஜீவிக்கும்போது, நம்முடைய ஜீவியத்தின் மூலமாய் ஆவியின் கனி வெளிப்படும். நாம் நீதிமான்களாக்கப்பட்டிருக்கிறோம் என்பது நம்முடைய கனிகளினால் அறியப்படும். நாம் கிறிஸ்துவுக்குரியவர்கள் என்பது நம்முடைய கனிகள் மூலமாக வெளிப்படுத்தப்படும்.

நித்திய ஜீவனைப் பெற்றிருக்கிற நாம் அதற்கேற்ற பிரகாரம் ஜீவிக்கவேண்டும். நம்முடைய ஜீவியத்தில் நீதியும் சந்தோஷமும் நிரம்பியிருக்க வேண்டும். நம்முடைய சுயமுயற்சியினால் நாம் நீதிமானாக்கப்படுவதில்லை. தேவனுடைய கிருபையினால், கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினால் நாம் நீதிமானாக்கப்பட்டிருக்கிறோம். தேவனுடைய சுதந்தரராக நாம் ஆக்கப்படவேண்டுமென்றால், நாம் நீதிமான்களாகயிருக்க வேண்டும். தேவனுடைய வாக்குத்தத்தத்தில், நித்திய ஜீவனும் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

பரிசுத்த ஆவியானவர் நமக்குள் விசுவாசத்தைக் கொடுக்கிறார். நித்திய ஜீவனை நாம் பெற்றுக்கொள்வோம் என்னும் நம்பிக்கையை ஆவியானவரே நமக்குக் கொடுக்கிறார். இந்த நம்பிக்கையினாலேயே நாம் நித்திய ஜீவனுக்கு சுதந்தரராகயிருக்கிறோம். விசுவாசமும் நம்பிக்கையும் நம்மிடத்தில் இணைந்து காணப்படவேண்டும். அப்போது நமக்குள் சந்தோஷம் நிரம்பி வழியும். நித்திய ஜீவன் நமக்கு உண்டாகும் என்பதை நம்பும்போது நம்முடைய ஜீவியத்தில் சந்தோஷம் பெருகும்.

நாம் இப்பிரபஞ்சத்தில் கர்த்தருடைய சாதாரண விசுவாசிகளாகயிருக்கலாம். இங்கு நம்முடைய சமுதாய நிலமை சாதாரணமானதாகயிருக்கலாம். நம்முடைய பொருளாதாரமும் கல்வியறிவும் சாதாரணமானதாகயிருக்கலாம். இருந்தாலும் நமக்கும் நித்திய ஜீவன் உண்டாகும். நித்திய ஜீவனுக்கு நாமும் சுதந்ததராகயிருக்கிறோம். நம்முடைய சுயபக்தியினாலோ, சுயகிரியையினாலோ நித்திய ஜீவனைப் பெற்றுக்கொள்ள முடியாது. தேவனுடைய கிருபையினாலேயே நமக்கு நித்திய ஜீவன் உண்டாயிருக்கிறது.

ஆகையினால் கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம் ஒருவரையும் தூஷிக்கக்கூடாது. ஒருவரோடும் சண்டைபண்ணக் கூடாது. பொறுமையுள்ளவர்களாயிருக்கவேண்டும். எல்லா மனுஷருக்கும் சாந்தகுணத்தைக் காண்பிக்கவேண்டும் (தீத் 3:2).

விசுவாசிகளாகிய நாம் தேவனுடைய அன்பையும், கிருபையையும், இரக்கத்தையும் அதிகமாய் அனுபவித்திருக்கிறோம். தேவனுடைய அன்பினாலும் கிருபையினாலும் நாம் அநேக ஆசீர்வாதங்களைப் பெற்றிருக்கிறோம். தேவனுக்கேற்ற வேளையில் நித்திய ஜீவனை சுதந்தரித்துக்கொள்வோம் என்னும் நம்பிக்கையும் நம்மிடத்தில் உண்டு. இவையெல்லாவற்றிற்கும் கிறிஸ்துவின் கிருபையே ஆதாரமாயிருக்கிறது.

## நற்கிரியைகள்
## தீத் 3:8

**தீத் 3:8. இந்த வார்த்தை உண்மையுள்ளது; தேவனிடத்தில் விசுவாசமானவர்கள் நற்கிரியைகளைச் செய்ய ஜாக்கிரதையாயிருக்கும்படி, நீ இவைகளைக்குறித்துத் திட்டமாய்ப் போதிக்கவேண்டுமென்று விரும்புகிறேன்; இவைகளே நன்மையும் மனுஷருக்குப் பிரயோஜனமுமானவைகள்.**

நம்முடைய நற்கிரியைகளினால் நாம் இரட்சிக்கப்படுவதில்லை. தேவனுடைய கிருபையினாலும் அவருடைய இரக்கத்தினாலும் மாத்திரமே நாம் இரட்சிக்கப்படுகிறோம். அப்போஸ்தலர் பவுல் இந்தச் சத்தியத்தைத் தெளிவாக எழுதுகிறார். கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தினால் மாத்திரமே நாம் நீதிமான்களாக்கப்படுகிறோம். தேவன் தம்முடைய கிருபையை நமக்கு அதிக அளவில் கொடுத்திருக்கிறார். நம்முடைய இரட்சிப்புக்கும் நற்கிரியைகளுக்கும் சம்பந்தமில்லை. ஆனாலும் இரட்சிக்கப்பட்ட நாம் நற்கிரியைகளை செய்யவேண்டும்.

தேவன் நமக்கு நியமித்திருக்கிற கடமைகளை நாம் உண்மையோடு நிறைவேற்றவேண்டும். தேவனிடத்தில் விசுவாசமுள்ளவர்கள் நற்கிரியைகளைச் செய்ய ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். நாம் நற்கிரியைகளைச் செய்யவேண்டுமென்பது தேவன் நமக்கு நியமித்திருக்கிற கடமை. நாம் செய்கிற நற்கிரியைகளினால் நமக்கு இரட்சிப்பு உண்டாகாது. ஆனாலும் நாம் நற்கிரியைகளைச் செய்யவேண்டும். தேவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படியாமல், நம்மால் தேவனுடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொள்ள முடியாது. தேவனுடைய கிருபையும், இரக்கமும் நமக்கு வேண்டுமென்றால், தேவன் நமக்கு கொடுத்திருக்கிற கட்டளைகளை நிறைவேற்றுவதும் அவசியமாயிருக்கிறது.

கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினால் நாம் இரட்சிக்கப்படுகிறோம். கிரியையில்லாத விசுவாசம் செத்ததாயிருக்கிறது. நம்முடைய விசுவாசம் நற்கிரியைகளைச் செய்யவேண்டும். எப்போதாவது நற்கிரியைகளைச் செய்யலாம் என்று நினைக்கக்கூடாது. எப்போதும் நற்கிரியைகளைச் செய்யவேண்டும். நற்கிரியைகளைச் செய்ய நாம் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். அப்போஸ்தலர் பவுல் இந்த ஆலோசனையைச் சொல்லிவிட்டு, "இவைகளே நன்மையும் மனுஷருக்குப் பிரயோஜனமுமானவைகள்" என்று எழுதுகிறார்.

தீத்து இந்த உபதேசத்தை கிரேத்தா தீவார் மத்தியிலே திட்டமாய்ப் போதிக்கவேண்டும். நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து, நாம் செய்கிற நற்கிரியைகளினிமித்தம் நம்மை இரட்சிப்பதில்லை, என்னும் சத்தியத்தைப் போதிக்கவேண்டும். கிறிஸ்துவானவர் தம்முடைய கிருபையினால் நம்மை இரட்சிக்கிறார் என்னும் சத்தியத்தையும் போதிக்கவேண்டும். அதே வேளையில் தேவனுடைய கிருபையினால் இரட்சிக்கப்பட்டிருக்கிறவர்கள், நற்கிரியைகளைச் செய்யவேண்டும் என்பதையும் திட்டமாய்ப் போதிக்கவேண்டும்.

## விட்டுவிலகு
## தீத் 3 : 9-11

**தீத் 3:9. புத்தியீனமான தர்க்கங்களையும், வம்ச வரலாறுகளையும், சண்டைகளையும், நியாயப்பிரமாணத்தைக் குறித்து உண்டாகிற வாக்குவாதங்களையும் விட்டு விலகு; அவைகள் அப்பிரயோஜனமும் வீணுமாயிருக்கும்.**

**தீத் 3:10. வேதப்புரட்டனாயிருக்கிற ஒருவனுக்கு நீ இரண்டொருதரம் புத்தி சொன்னபின்பு அவனைவிட்டு விலகு.**

**தீத் 3:11. அப்படிப்பட்டவன் நிலைதவறி, தன்னிலே தானே ஆக்கினைத் தீர்ப்புடையவனாய்ப் பாவஞ் செய்கிறவனென்று அறிந்திருக்கிறாயே.**

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு புத்திசொல்லும்போது, அவர் என்னென்ன சத்தியங்களையெல்லாம் போதிக்கவேண்டுமென்றும், எதையெல்லாம் விட்டுவிலக வேண்டுமென்றும் சொல்லுகிறார். புத்தியீனமான தர்க்கங்களை வம்சவரலாறுகளையும் விட்டு தீத்து விலகவேண்டும். வேதவாக்கியத்தில் ஒரு சில வம்சவரலாறுகள் எழுதப்பட்டிருக்கிறது. இவை நமக்கு அவசியமானவை. கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் வம்சவரலாற்றை நாம் தியானித்துப் பார்க்கிறோம். தாவீதின் வம்சத்தில் கிறிஸ்துவானவர் வந்திருக்கிறார் என்பதை வம்சவரலாற்றின் மூலமாகவே அறிந்துகொள்கிறோம். கர்த்தருடைய பிள்ளைகளாகிய நமக்கு வேதாகமத்தில் எழுதப்பட்டிருக்கிற வம்சவரலாறுகள் எல்லாமே மிகவும் அவசியமானவை.

வம்சவரலாறுகளை நம்முடைய பக்திவிருத்திகேதுவாக பயன்படுத்த வேண்டும். இருதயத்தில் பெருமை உண்டாவதற்கோ அல்லது புத்தியீனமான தர்க்கங்களைப் பேசுவதற்கோ வம்சவரலாறுகளைப் பயன்படுத்தக்கூடாது. யூதர்களில் ஒரு சிலர் தாங்கள் எந்த வம்சத்தைச் சேர்ந்வதர்கள் என்று சொல்லி பெருமைப்படுகிறார்கள். வம்சவரலாறுகளினால் யூதர்களுக்குள் பிரிவினையும் உண்டாகிவிடுகிறது. எந்தக் கோத்திரம் பெரிய கோத்திரமென்றும், எது முக்கியமான கோத்திரமென்றும் அவர்கள் புத்தியீனமாக தர்க்கம்பண்ணுகிறார்கள். இந்தத் தர்க்கத்தினால் பக்திவிருத்தி உண்டாகப்போவதில்லை. இப்படிப்பட்ட புத்தியீனமான தர்க்கங்களையும், வம்சவரலாறுகளையும் விட்டு தீத்து விலகவேண்டும்.

சண்டைகளையும் நியாயப் பிரமாணத்தைக்குறித்து உண்டாகிற வாக்குவாதங்களையும் விட்டு தீத்து விலகவேண்டும். ஒரு சிலர் மோசேயின் நியாயப்பிரமாணத்தில் பக்திவைராக்கியம் காண்பிக்கிறார்கள். நியாயப்பிரமாணத்தின் கிரியைகளைச் செய்தால் மாத்திரமே இரட்சிப்பு உண்டு என்று அவர்கள் போதிக்கிறார்கள். முன்னோர்களின் பாரம்பரியத்திற்கு அவர்கள் முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். இந்த உபதேசத்தைப் பின்பற்றுகிறவர்களும் கிரேத்தா தீவிலுள்ள சபைகளில் இருக்கிறார்கள். அவர்கள் விசுவாசிகளிடம் நியாயப்பிரமாணத்தைக் குறித்து வாக்குவாதம்பண்ணுகிறார்கள். தீத்து அவர்களோடு வாக்குவாதம்பண்ணக் கூடாது. சண்டைபோடக் கூடாது. வாக்குவாதம் பண்ணுகிறவர்களோடு எதிர்த்து நிற்கவேண்டும் என்னும் அவசியமுமில்லை. ஏனெனில் நியாயப்பிரமாணத்தைக் குறித்து உண்டாகிற சண்டைகளும் வாக்குவாதங்களும் அப்பிரயோஜனமும், வீணுமானவை. இதனால் ஒரு பிரயோஜனமும் உண்டாகப் போவதில்லை.

நியாயப்பிரமாணத்தைக் குறித்து உண்டாகிற வாக்குவாதங்களையே, அப்போஸ்தலர் பவுல் "புத்தியீனமான தர்க்கங்கள்" என்று சொல்லுகிறார். நியாயப் பிரமாணத்தை விசுவாசிக்கிறவர்கள்தான் வம்ச வரலாறுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். இவர்களுக்கு தேவபக்தி முக்கியமல்ல. கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்திற்குப் பதிலாக, இவர்களிடத்தில் புத்தியீனமான தர்க்கங்களும், வம்சவரலாற்று பெருமைகளும் நிரம்பியிருக்கிறது. இவை விசுவாசத்திற்கும், பக்திவிருத்திக்கும் தடையாயிருக்கிறது.

கர்த்தருடைய ஊழியக்காரர்கள் பிரயோஜனமுள்ள நல்ல காரியங்களை ஜனங்களுக்குப் போதிக்கவேண்டும். நல்ல காரியங்களைப்பற்றி உபதேசத்தால் மாத்திரம் போதாது. நல்ல காரியங்களுக்கு எதிராகயிருக்கிற தடைகளுக்கு விரோதமாக எதிர்த்துப் போதிக்கவேண்டும். அவற்றைவிட்டு விலகுமாறு விசுவாசிகளுக்குப் புத்திசொல்லவேண்டும். விசுவாசிகள் கட்டுக்கதைகளைக் கேட்கவேண்டுமென்று பிரியப்படக்கூடாது. அவர்களுக்கு ஆரோக்கியமான உபதேசத்தைப் போதிக்கவேண்டும்.

கிரேத்தா தீவிலுள்ள சபையில் வேதப்புரட்டும், வேதபுரட்டரும் இருக்கிறார்கள். அவர்களுக்கு இரண்டொருதரம் புத்திசொல்லலாம். ஒரு தரம் புத்திசொல்லிவிட்டு, அவர் இரட்சிக்கப்பட வேண்டும் என்னும் விருப்பத்தில், அவருக்கு இன்னும் ஒரு தரம் புத்திசொல்லலாம். எப்படியாவது அந்த ஆத்துமாவும் இரட்சிக்கப்பட வேண்டும். அதற்காக வேதப்புரட்டர்மீது அதிகக் கவனம் செலுத்தக்கூடாது. அவர்களுக்கு எப்போதும் புத்திசொல்லிக்கொண்டிருக்கக் கூடாது. ஒரு தரம் அல்லது இரண்டு தரம் புத்திசொல்லியும், வேதப்புரட்டன் திருந்தவில்லையென்றால், அவனை விட்டு விலகிவிடவேண்டும். சபையின் ஐக்கியத்திலிருந்து வேதப்புரட்டனை விலக்கி வைத்துவிடவேண்டும்.

ஒரு சிலருக்குப் புத்திசொன்னால் அவர்கள் திருந்துவார்கள். வேறு சிலரோ எவ்வளவு புத்திசொன்னாலும் திருந்தமாட்டார்கள். துணிகரமான பாவங்களைச் செய்வார்கள். வேதப்புரட்டன் நிலைதவறி தடுமாறுகிறவன். அவன் தன்னிலே தானே ஆக்கினைத் தீர்ப்புடையவன். பாவம் செய்கிறவன். வேதப்புரட்டனுடைய பாவம் பயங்கரமானது. அவன் துணிகரமாய்ப் பாவம் செய்கிறான்.

"நிலை தவறுதல்" என்னும் வார்த்தைக்கு, "மறுபடியும் திரும்பக் கட்டமுடியாதபடி சீரழிந்துபோன நிலமையிலிருப்பது" என்று பொருள். வேதப்புரட்டர்களைத் திருத்த முடியாது. இவர்கள் பாழாய்ப்போன கட்டிடங்களைப் போன்றவர்கள். இப்படிப்பட்ட கட்டிடங்களைப் பழுதுபார்த்து செப்பனிட முடியாது. இதுபோலவே வேதப்புரட்டர்களுக்கும் புத்திசொல்லி, அவர்களைத் திருத்த முடியாது.

வேதப்புரட்டர்களுக்கு எவ்வளவுதான் புத்திசொன்னாலும் சத்தியத்திற்குத் திரும்பி வரமாட்டார்கள். உண்மையான சத்தியத்தை அங்கீகரிக்கமாட்டார்கள். அவர்களுடைய சொந்த வார்த்தைகள்தான் அவர்களுக்குச் சத்தியம். தேவனுடைய நியாயத்தீர்ப்பின் உபதேசத்தையே இவர்கள் புரட்டிவிடுகிறார்கள். தங்களுக்கு நியாயத்தீர்ப்பு வராது என்று சொல்லுகிறார்கள். ஆனால் இவர்கள்மீது தேவனுடைய நியாயத்தீர்ப்பு நிச்சயமாய் வரும். தேவனுடைய சித்தத்தை இவர்கள் புரட்டி பேசுகிறார்கள். தேவனுடைய நோக்கத்தையும், அவருடைய ஊழியத்தையும் வேதப்புரட்டர்கள் புரட்டி போடுகிறார்கள்.

வேதப்புரட்டர்களைத் திருத்துவதற்கு ஊழியக்காரர்கள் பொறுமையைக் கடைப்பிடிக்கவேண்டும். பொறுமையினால் பிரயோஜனமுண்டாகாதபோது, அவர்களை கண்டித்துத் திருத்தவேண்டும். அவர்களுக்கு வேதனைகளை உண்டாக்கவேண்டும். சபையின் ஐக்கியத்திலிருந்து வேதப்புரட்டர்களை நீக்கிப்போடவேண்டும் அப்போது, அவர்களுடைய மனதில் வேதனை உண்டாகும். ஒருவேளை அவர்கள் திருந்துவதற்கு வாய்ப்பு கிடைக்கும். அவர்களுக்கு இரண்டொரு தரம் புத்திசொல்லலாம். இரண்டொருதரம் கடினமான வார்த்தைகளினால் எச்சரிக்கலாம்.

வேதப்புரட்டர்களைத் திருத்துவது மாத்திரம் சபையின் ஊழியமல்ல. சபை இந்த ஊழியத்தை முழுநேரமாய்ச் செய்யமுடியாது. சபையில் ஏராளமான ஆத்துமாக்கள் இருக்கிறார்கள். எல்லோரும் வேதப்புரட்டர்களல்ல. சபை தன் பரிசுத்தத்தைக் காத்துக்கொள்ள வேண்டும். விசுவாசமுள்ளவர்களுக்கு கிறிஸ்துவின் உபதேசத்தைப் போதிக்கவேண்டும். அவர்கள் ஆவிக்குரிய ஜீவியத்தில் வளர்ச்சி பெறுவதற்கு உதவிபுரியவேண்டும். வேதப்புரட்டர்களை மாத்திரம் கவனித்துவிட்டு, வேதத்தை நம்புகிறவர்களை கவனிக்காமல் விட்டுவிடக்கூடாது.

சில சமயங்களில் வேதப்புரட்டர்கள் தண்டிக்கப்படும்போது, அவர்கள் திருந்துவதற்கு வாய்ப்புள்ளது. அவர்கள் மனந்திரும்பி, கிறிஸ்துவையும் அவருடைய சுவிசேஷத்தையும் விசுவாசித்தால், அவர்களுக்கும் ஆசீர்வாதமுண்டு. யாரையும் இரட்சிக்கக்கூடாதபடிக்கு கிறிஸ்துவின் கரம் ஒருபோதும் குறுகிப்போவதில்லை. ஆனாலும் பாவிகள்தான் மனந்திரும்பவேண்டும். வேதப்புரட்டர்கள்தான் தங்கள் தப்பிதங்களை உணர்ந்து மனந்திரும்பவேண்டும்.

## நம்முடையவர்கள்
## தீத் 3 : 12-14

**தீத் 3:12. நான் அர்த்தெமாவையாவது தீகிக்குவையாவது உன்னிடத்தில் அனுப்பும் போது நீ நிக்கொப்போலிக்கு என்னிடத்தில் வர ஜாக்கிரதைப்படு; மாரிகாலத்திலே அங்கே தங்கும்படி தீர்மானித்திருக்கிறேன்.**

**தீத் 3:13. நியாயசாஸ்திரியாகிய சேனாவுக்கும் அப்பொல்லோவுக்கும் ஒரு குறைவுமில்லாதபடிக்கு அவர்களை ஜாக்கிரதையாய் விசாரித்து வழிவிட்டனுப்பு.**

**தீத் 3:14. நம்முடையவர்களும் கனியற்றவர்களாயிராதபடி குறைவுகளை நீக்குகிறதற்கேதுவாக நற்கிரியைகளைச் செய்யப் பழகட்டும்.**

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு மேலும் சில கட்டளைகளைக் கொடுக்கிறார். அர்த்தெமாவையாவது, தீகிக்குவையாவது பவுல் தீத்துவினிடத்தில் அனுப்பவேண்டுமென்று திட்டமிட்டிருக்கிறார். அவர்கள் தீத்துவினிடத்தில் வரும்போது, தீத்து நிக்கொப்போலிக்கு வந்து, அங்கு பவுலினிடத்தில் தங்கியிருக்கவேண்டும். மாரிக்காலத்திலே நிக்கொப்போலியில் தங்கியிருக்கவேண்டுமென்று பவுல் தீர்மானித்திருக்கிறார். தீத்து நிக்கொப்போலிக்கு வரும்போது, கிரேத்தா தீவிலே தீத்துவுக்குப் பதிலாக, அர்த்தெமாவாவது தீகிக்குவாவது ஊழியம் செய்வார்கள்.

அர்த்தெமாவைப்பற்றி வேதாகமத்தில் அதிகமாக எழுதப்படவில்லை. தீகிக்குவின் பெயர் பலவசனங்களில் மிகுந்த மரியாதையோடு எழுதப்பட்டிருக்கிறது. பவுல் தீகிக்குவைத் தனக்குப் பிரியமுள்ள சகோதரரென்றும், உண்மையுள்ள ஊழியக் காரரென்றும், கர்த்தருக்குள் உடன் வேலையாள் என்றும் குறிப்பிட்டிருக்கிறார். கிரேத்தா தீவுக்கு பவுல் தகுதியுள்ள ஊழியக்காரரை அனுப்புகிறார்.

பவுல் தீத்துவுக்கு மேலும் ஒரு கட்டளை கொடுக்கிறார். பவுலின் சிநேகிதரை தீத்து நன்றாய் விசாரிக்கவேண்டும். அவர்களுடைய பிரயாணத்திற்கு உதவிபுரியவேண்டும். அவர்களுக்கு ஒரு குறைவும் இல்லாதபடிக்கு அவர்களை ஜாக்கிரதையாய் விசாரித்து, வழியனுப்பவேண்டும். அவ்விருவரில் ஒருவர் நியாயசாஸ்திரியாகிய சேனா. மற்றொருவர் அப்பொல்லோ. அப்பொல்லோ உண்மையுள்ள ஊழியக்காரர். அவர்களுடைய பிரயாணத்தில் தீத்து கூடயிருந்து உதவிபுரியவேண்டும். அப்போஸ்தலருடைய சிநேகிதருக்கு உதவிசெய்வதும் ஒரு ஊழியமாக இருக்கிறது.

விசுவாசிகள் கனிகொடுக்க வேண்டும். குறைவுகளை நீக்குகிறதற்கு ஏதுவாக நற்கிரியைகளைச்செய்யவேண்டும். நம்முடைய ஆவிக்குரிய ஜீவியம் கனிகொடுக்காத வறண்ட ஜீவியமாக இருக்கக்கூடாது. நாம் மற்றவர்களுக்கு உபத்திரவம் பண்ணாமலிருந்தால் மாத்திரம் போதாது. அவர்களுக்கு உபகாரமும் பண்ணவேண்டும். ஒரு சில விசுவாசிகள் பிறருக்குத் தீங்குசெய்யாமல் அமைதியாக யிருப்பார்கள். இவர்கள் மற்றவர்களுக்கு நன்மையும் செய்யமாட்டார்கள். தம்முடைய பிள்ளைகள் நற்கிரியைகளைச் செய்ய வேண்டுமென்று கர்த்தர் எதிர்பார்க்கிறார்.

கர்த்தருடைய பிள்ளைகள் தங்களுக்கும், தங்கள் குடும்பத்திற்கும், மற்றவர்களுக்கும் பிரயோஜனமுள்ளவர் களாகயிருக்கவேண்டும். நற்கிரியைகளைச் செய்யவேண்டும். பிறருடைய குறைவுகளை நீக்கவேண்டும். யாருக்கும் தீங்கு செய்யக்கூடாது. கண்ணியமான தொழில் செய்யவேண்டும். நாம் செய்கிற வேலையில் நேர்மையாயிருக்கவேண்டும். கடினமாய் உழைக்கவேண்டும். நம்முடைய உழைப்பின் மூலமாய் வருகிற சம்பளத்தைக் கொண்டு நம்மையும், நம்முடைய குடும்பத்தாரையும் போஷிக்கவேண்டும். அவர்களுடைய தேவைகளைச் சந்திக்கவேண்டும். நாம்மற்றவருக்குப் பாரமாயிருக்கக் கூடாது. உபகாரமாய் இருக்க வேண்டும். மற்றவர்களுடைய குறைவில் உதவிசெய்கிறவராயிருக்கவேண்டும்.

நாம் ஒரு வேலையும் செய்யாமல் சோம்பேறியாயிருக்கக்கூடாது. நாம் சும்மாயிருக்கவேண்டுமென்று கர்த்தர் நமக்கு ஆலோசனை சொல்லவில்லை. நாம் ஐசுவரியவான்களாக வேண்டுமென்று ஆசைப்படவேண்டியதில்லை. ஆனாலும் நம்முடைய குறைவுகள் நீங்கவேண்டும். மற்றவர்களுடைய உழைப்பின் மூலமாய் நம்முடைய குறைவுகளை நீக்க பிரயாசப்படக்கூடாது. நாமே நற்கிரியைகளைச் செய்யப்பழகவேண்டும். ஏதாவது ஒரு தொழிலைக் கற்றுக்கொள்ளவேண்டும். கண்ணியமான தொழில் நடத்தவேண்டும். மற்றவர்களுக்குப் பாரமில்லாமல் நம்முடைய சொந்தக் கைகளினால் உழைத்து, நம்முடைய குடும்பத்தைப் பராமரிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும்.

## கிருபையானது
## தீத் 3:15

**தீத் 3:15. என்னோடிருக்கிற யாவரும் உனக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள். விசுவாசத்திலே நம்மைச் சிநேகிக்கிறவர்களுக்கு வாழ்த்துதல் சொல்லு. கிருபையானது உங்களனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.**

அப்போஸ்தலர் பவுல் தீத்துவுக்கு வாழ்த்துதலும், அப்போஸ்தல ஆசீர்வாதமும் சொல்லி இந்த நிருபத்தை நிறைவுசெய்கிறார். மற்ற விசுவாசிகள் நமக்காக ஜெபம்பண்ணும்போது நம்முடைய இருதயத்தில் ஆறுதலும் உற்சாகமும் உண்டாகும். பவுலும் அவரோடு கூடயிருக்கிற யாவரும் தீத்துவுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள். தீத்துவோடுகூட பவுலைச் சிநேகிக்கிறவர்கள் சிலர் இருக்கிறார்கள். பவுல் அவர்களுக்கும் வாழ்த்துதல் சொல்லுகிறார்.

"கிருபையானது உங்களனைவரோடுங் கூடயிருப்பதாக. ஆமென்" என்று பவுல் வாழ்த்துகிறார். இதுவே அப்போஸ்தலர் பவுலின் விருப்பமும் ஜெபமும் ஆகும். நம் எல்லோருக்குமே கிருபைவேண்டும். தீத்துவுக்கும், அவரோடுகூட கிரேத்தா தீவிலே இருக்கிற விசுவாசிகளுக்கும் தேவனுடைய கிருபை தேவைப்படுகிறது. பவுல் அவர்களுக்குத் தேவகிருபை கிடைக்கவேண்டுமென்று ஜெபிக்கிறார். இதையே தன்னுடைய அப்போஸ்தல ஆசீர்வாதமாகவும் சொல்லுகிறார். நாம் கர்த்தரிடத்தில் ஜெபிக்கும்போது நமக்கும் மற்றவர்களுக்கும் தேவகிருபை கூடயிருக்க வேண்டுமென்று விண்ணப்பம்பண்ண வேண்டும். தேவகிருபை நம் எல்லோருக்கும் சகலவிதமான நன்மைகளையும் செய்யும்.

பவுல் ஜெபித்து முடிக்கும்போது "ஆமென்" என்று சொல்லுகிறார். தன்னுடைய ஜெபத்திற்கு கர்த்தர் பதில்கொடுப்பார் என்று நம்புகிறார். தன்னுடைய ஜெபத்தின் பிரகாரமாகவே அவர்களுக்கு ஆகக்கடவது என்று விரும்பி, நம்பிக்கையோடு "ஆமென்" என்று சொல்லி, இந்த நிருபத்தை நிறைவு செய்கிறார்.